# பொருளடக்கம்

மலர் 19] நவம்பர் 1966 [இதழ் 5
ஹிஜ்ரீ 1386 ரஜப்-ஷஃபான்

1. அமளிக்கு ஆக்கம்தரும் ஆட்சி! -தலையங்கம்.
2. காயிதெ மில்லத்தின் வேண்டுகோள்.
3. நெஞ்சம் விட்டகலா நேர்த்தியான மனிதர்.
4. கலைவாழ்வு வாழ்ந்த கவிஞர்!
5. மேற்கு வானம் (தொடர் கதை)
6. முஸ்லிம் மன்னர்களின் நூலார்வம்.

மற்றும் பல சுவையான கட்டுரைகள், கேள்வி—பதில்கள்

## 22 காரட்

# UMAR தங்க கவரிங் நகைகள்




No. 11 Rs. 25—50
No. 12 Rs. 16—00
No 13 Rs. 10—00
No. 14 Rs. 18—00
No. 15 Rs. 9—50
No. 16 Rs. 9—50
No. 17 Rs. 8—50
No. 18 Rs. 3—50
No. 19 Rs. 8—50
No. 20 Rs. 25—50
No. 21 Rs. 3—00
No. 22 Rs. 4—50
No 23 Rs. 4—00
No. 24 Rs. 4—50

கேட்லாக்
வேண்டுவோர்
20 பைசா ஸ்டாம்பு
அனுப்பவும்.

## உம்மா கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

552, பைகிராப்ட்ஸ் ரோடு,

திருவல்லிக்கேணி :: சென்னை-5.




# அமளிக்கு ஆக்கந்தரும் ஆட்சி!

நாட்டின் நலனிலே அக்கறை கொண்டுள்ள அனைவரும் இந்தியாவில் இன்று நிலவிவரும் அவல நிலை குறித்து தீவிரமாக சிந்திக்கத் தொடங்கியுள்ளனர். ஜனாதிபதி முதல் பலரும் தங்கள் கருத்துகளை வெளியிட்டு வருகிறார்கள்

பலவகைப்பட்ட காரணங்களைக் காட்டி நடத்தப்பட்டு வரும் கிளர்ச்சிகளின் விளைவாக நடைபெறும் வன்முறைச் செயல்கள் அன்றாட நிகழ்ச்சிகளாகி விட்டன.

ஏதாவது ஒரு பிரச்னையை உண்டு பண்ணி அதன் பெயரால் யார் என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்ற அளவுக்கு சீரழிந்திருக்கிறது இன்றைய அரசியல் நிலைமை.

எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போலிருந்தது நவம்பர் ஏழாந் தேதியன்று புதுடில்லியில் நடைபெற்ற சம்பவங்கள்!

நாணய மதிப்புக் குறைப்பினால் உலக அரங்கில் ஏற்கனவே மங்கித் தோன்றிய இந்தியாவின் உருவத்தை மேலும் சிதைத்து வருகின்றன இச் செயல்கள்.

விலைவாசிகள் ஏற்றத்தையும், உணவுப் பொருள்கள் பதுக்கப் படுவதையும் கலப்படம் செய்யப் படுவதையும் தொடர்ந்து ரயில் விபத்துகள் நடப்பதையும் தடுக்க இயலாத மத்திய அரசும் மாநில அரசாங்கங்களும், சட்டத்தையும் அமைதியையும் பாதுகாக்கும் பணியையாவது செவ்வனே செய்யும் என்று எதிர்பார்ப்பது வீணான நம்பிக்கையாகி விட்டது.

டில்லியில் நடந்த பசுவதை எதிர்ப்பு ஆர்ப்பாட்டங்களையே எடுத்துக் கொள்வோம். உரிய காலத்தில் திறம்பட செயலாற்றி இருந்தால் வன்முறைச் செயல்கள் நிகழாமல் தடுத்திருக்க முடியாதா?

முடியும்! ஆனால் அரசு தன் கடமையை சரிவரச் செய்யத் தவறிவிட்டது. பிறகு மந்திரி சபையில் சில பதவிகளை மாற்றி அமைத்ததன் மூலம் அதற்குப் பரிகாரம் கண்டு விட்டதாக ஆட்சியாளர் நினைப்பார்களானால் அதைவிடப் பெரிய தவறு எதுவும் இருக்க முடியாது,

அவ்வாறு மந்திரி சபையில் மாறுதல் செய்வதிலும் கூட பிரதமர் காட்டிய தயக்கமும் துணிவின்மையும் அவருடைய பலவீனத்தைப் படம் பிடித்துக் காட்டுவதாகவே உள்ளது.

இவ்வளவுக்கும் காரணம் எதிர்க்கட்சிகள் கூறுவதுபோல நாட்டை சரிவர ஆளும் திறமை காங்கிரஸ் கட்சிக்கு இல்லாமல் போய் விட்டதுதான்! நேர்மையற்றவர்களும், சுயநலவாதிகளும் கும்பல் கும்பலாகக் காங்கிரஸ் கட்சிக்குள் புகுந்து கொண்டு அதனை ஆட்டிப் படைத்து வருகிறார்கள். அதனாலதான் அவர்களுடைய ஆட்சியில் ஊழல்களும் ஒழுக்கமின்மையும் மலிந்து கிடைக்கின்றன. நாடு நலிந்து வருகிறது.

இதற்கெல்லாம் ஒரே பரிகாரம் நல்லாட்சியிலும், ஒழுக்கத்திலும், நேர்மையிலும் நம்பிக்கை கொண்டுள்ள இதர கட்சிகள் அதிகாரத்திற்கு வருவதுதான். அடுத்துவரும் பொதுத் தேர்தலின் மூலமாகவேனும் அந்த நல்ல நிலை தோன்றும் என்று நம்புவோம்.




# முஸ்லிம் லீக் தேர்தல் நிதி !

இந்திய யூனியன் முஸ்லிம் லீகின் தலைவர், காயிதெ மில்லத் அல்ஹாஜ் எம். முஹம்மது இஸ்மாயில் ஸாஹிப், எம். பி. அவர்களின் அறிக்கை ஒன்று இவ்விதழின் பிறிதோரிடத்தில் பிரசுரமாகியுள்ளது.

காங்கிரஸ் ஆட்சியின் கீழ் சென்ற இருபதாண்டுக் காலத்தில் நாட்டின் பொருளாதாரச் சிதைவும் அரசியல் ஒழுக்கச் சீர்குலைவும தொடர்ந்து அதிகரித்து வருவதை விளக்கிக் காட்டியுள்ளார்கள். தலைவர் அவர்கள் தங்கள் அறிக்கையிலே சுருக்கமாகவும், வெகு தெளிவாகவும், ஆணித்தரமாகவும் அமைந்துள்ள இதனை முஸ்லிம் லீக் தேர்தல் அறிக்கையின் சாரமாகக் கொள்ளலாம். ''தேசத்தின் நலனுக்காகச் செயல் படுவதும், தேசத்தின் எல்லா மக்களும் சமமான அந்தஸ்து, உரிமை, கடமை கொண்டு ஒன்றுபட்டு, நாட்டின் நலனை வளர்ப்பதும் முஸ்லிம் லீகின் நோக்கம்'' என்பது இவ்வறிக்கையில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

மற்ற எதிர்க்கட்சிகளோடு கூட்டு சேர்ந்து அடுத்த தேர்தலில் காங்கிரஸ்ஆட்சியை அகற்றி நாட்டில் நல்லாட்சி நிறுவுவதன் அவசியத்தை விளக்கியிருப்பதோடு அதனைச் செயல் முறையில் நிறைவேற்றுவதற்குத் தேவையான பொருளுதவியை முஸ்லிம் லீகிற்கு வழங்கும்படியும் காயிதெ மில்லத் அவர்கள் வேண்டிக் கொண்டுள்ளார்கள்.

அவர்களின் கோரிக்கைக்கிணங்க முஸ்லிம் லீகின் தேர்தல் நிதிக்காக வேண்டிய பொருளுதவியைச் செய்ய முஸ்லிம் சமுதாயம் தயங்காது என்பதை நாம் அறிவோம். எனினும் அதனைக் காலந்தாழ்த்தாது உரிய காலத்தில் செய்யுங்கள் என்று நினைவுறுத்துகிறோம் !

# முத்தரப்பு மாநாடு !

இந்தியா, ஐக்கிய அரபுக் குடியரசு, யூகோஸ்லாவியா ஆகிய மூன்று மண்டலச் சார்பற்ற நாடுகளின் ஆட்சித் தலைவர்களும் சென்ற மாதம் புது தில்லியில் ''உச்சிமா நாடு'' ஒன்றில் கூடிப் பேசினார்கள். இதனால் மண்டலசார்பற்ற இதர சிறிய நாடுகளுக்கும் நற்பயன் விளையும் என்று நம்புவோம்.

மாநாட்டுக்குப் பிறகு வெளியிடப்பட்ட அறிக்கையில் ''இதனைச் சொல்லாமல் விட்டுவிட்டார்கள்; இதைச் சொல்லி இருக்கக் கூடாது!'' என்று குறை கூறுபவர்கள் இல்லாமல் இல்லை. எனினும் முத்தரப்பினருக்கும் பொதுவாக உடன் பாடுள்ள விஷயங்களைத் தான் அறிக்கையில் கூற முடியுமாதலால் அவ்வாறு குறை கூறலாகாது என்றே கருதுகிறோம்.

முக்கூட்டு மாநாட்டின் போது எடுக்கப்பட்ட படம் ஒன்று இவ்விதழின் அட்டையை அலங்கரிக்கிறது.

பிரதமர் இந்திரா காந்தி, அதிபர் ஜமால், அப்துந் நாஸிர், அதிபர் டீட்டோ ஆகிய மூன்று தலைவர்களோடு யூகோ அதிபரின் மனைவியான மேடம் டீட்டோவையும் அப்படத்தில் காணலாம்.

# நல்லாட்சி ஏற்பட உதவுங்கள்!

## காயிதெ மில்லத்தின் வேண்டுகோள்!

நாமெல்லோரும் சுதந்திரத் தாய் நாட்டின் சுயமதிப் புக் குரிய மக்கள்.

நாட்டின் உயர்வும் பெருமை யும் நலனும் மக்களுடையவை. மக்களின் உயர்வும நலனும் நாட்டினுடையவை.

இவ் வுயர்வையும் நலனையும் காத்து வளர்ப்பது அரசாட்சி யின் கடமை.

மக்களாட்சி—குடியரசு—கொண்ட நம் நாட்டில் அர சாட்சி ஏற்படுத்துவது மக்களின் உரிமை

அவ்வரசாட்சி செவ்வனே செயல்படுகிறதா? நாட்டின் நலனை வளர்க்கிறதா? என்று கவனித்துப் பார்த்துக் கொள்வது மக்களின் கடமை.

சரிவர செயல்படவில்லை யானால் அதை யகற்றிப் புது ஆட்சியை உண்டு பண்ணுவ தும் மக்களின் உரிமையும், கட மையுமாகும்.

இந்த மக்களாட்சி நாட்டில் காங்கிரஸ் கட்சி சென்ற இருபது ஆண்டுகளாக அதிகாரத்தில் இருந்து வருகிறது. உலக மக்க ளாட்சி வரலாற்றிலே இது வெகு நீண்ட காலம். இந்த நீண்ட காலத்தில் இக் கட்சி செய்த தென்ன?

ஏழ்மை நிறைந்த தாய் நாட் டுக்கு நல்வாழ்வைக் கொண்டு வரப்போகிறோம்; அதற்காக எல்லாவித உற்பத்திகளையும் அபரிமிதமாகப் பெருக்கப் போகி றோம் என்று இக் கட்சியினர் கூறினர்.

அதற்காக, பலவாறான அதிக வரிப்பளுவை மக்கள் மீது சுமத்தி பெரும் பணம் திரட்டினர். அது போதாதென்று, வெளி தேசத்த வரிடம் பெருந்தொகைகள் கடன் வாங்கினர். இவ்விதம் பெற்ற ஆயிரமாயிரம் கோடி ரூபாய்களை வைத்து மூன்று ஐந்தாண்டு திட்டங்கள் தீட்டிப் பெரும் செலவு செய்தார்கள்—இப்போ துள்ள பண நிலை என்ன வென் றால், அந்நிய நாட்டுச் செல வாணி பற்றுக்குறை என்கிறார் கள்-நாட்டுக்கு மிகவும் அவசிய மான பொருள்கள் பல அந்நிய நாடுகளிலிருந்து பணங்கொடுத் துத் தருவிக்கஇயலாதிருக்கிறது.

இவ்வளவு நீண்டகால அவகா சம் பெற்று இவ்வளவு அபார மான பெருந்தொகை வைத்துச் செலவு செய்ததற்கேற்றபலன் என்ன?

நம்மைவிட அதிக கஷ்டத்தி லும் பணவசதிக் குறைவிலு மிருந்த வெளிநாடுகள் பலவற் றிற்கும் வெகு கீழேயுள்ளது நம் நாட்டின்பொருளாதார நிலைமை.

நம் நாட்டிற்குள் என்ன நிலைமை? நாம் கண்கூடாகக் காண்பதென்ன?

தொன்று தொட்டு நிலத்தையும் நீர்வளத்தையும் வைத்து விவசாயமே பெருந்தொழிலாகக் கொண்டிருந்த இந்த நாட்டில் இத்துணை அபாண்டமான செலவுக்குப் பிறகும் இவ்வளவு நீண்ட ஆட்சிக்குப்பிறகும் உணவுபற்றாக்குறைவும் குடி தண்ணீர்க் குறைவும் மக்களை வாட்டி வருகிறது.

பொருள்களின் விலைவாசிகள் தான், நாட்டின் பொருள் உற்பத்தி அதிகமா; குறைவா, பஞ்சமா, என்று காட்டும் கருவியாகும். விலைவாசிகள் ஏற்றம் என்றால் உற்பத்திக் குறைவு என்று அர்த்தம். அந்த விலைவாசிகள் விஷம் போல் ஏறிக் கொண்டேயிருக்கின்றன.

வேலையில்லாத் திண்டாட்டம் நாட்டில் தாண்டவமாடுகின்றது. அதுவும் படித்தவர்கள் வேலையற்றலைவது குறிப்பிடத்தக்கது.

அரசாட்சியினர் நடாத்தும் பல பெருந்தொழிற்சாலைகள் இவ்வளவு காலத்திற்குப் பின்பும் இன்னும் அவல நிலையிலிருக்கின்றன.

ஆனால் நாட்டில் பெருகி மலிந்திருப்பது லஞ்சஊழல் ஒன்றாகும்

செலாவணி-ரூபாயின் மதிப்பு நாட்டின் பொருளாதார நிலைக்கு அடிப்படையானது அந்த மதிப்பைக் காப்பாற்றக் காங்கிரஸ் அரசினரால் முடியவில்லை. காலாகாலத்தில் சரிப்படுத்தாமல் விட்டதால் அது வேறு குழப்பத்தை யுண்டாக்கி வருகிறது. இந்தக் குழப்படி விஷயத்தை தேர்தலுக்குப் பின்னால் வைத்துக் கொள்ளலாமென்று கூறிய காங்கிரஸ் தலைவர்களும் உண்டு. தேர்தல் சமயத்தில் இதை மறைத்துவிட்டால் நிலைமையை மக்களுக்குத் தெரியாமல் வைத்து அவர்கள் வாக்குகளை வாங்கிவிடலாமென்று நினைத்துக் கொண்டார்கள் போலும். இப்போது மக்களின் அறிவு அவ்வளவு குறைந்ததல்ல

காங்கிரஸ் கட்சியின் ஆட்சித் திறமையற்ற தன்மையைக் காட்டுவதற்கு தற்போது இவ்வளவு போதும்.

மேற்சொன்னவையும் வேறு பல கஷ்டங்களும் காங்கிரஸ் ஆட்சியில் எல்லாப் பொதுமக்களுக்கும்—பெரும்பான்மையோருக்கும்சிறுபான்மையோருக்கும் பொதுவாகஏற்பட்டிருக்கும்பாதகங்களாகும். இந்தப் பாதககங்ளோடு சிறுபான்மையோருக்கு-முஸ்லிம்களுக்கு-தனியாகப் பல கஷ்டங்களையும் பாதகங்களையும் காங்கிரஸ் அரசினர் விளைவித்து வருகின்றனர் அவர்களது மதவாழ்வில் குறுக்கிடுவது; கலாச்சார, கல்வித் துறையில் குந்தகம் விளைவிப்பது; பலவிடங்களில் அடிக்கடி அவர்களது உயிருக்கும் உடைமைக்கும் ஆபத்து ஏற்படுவதை நிரந்தரமாகத் தடை செய்யாதிருப்பது; அவர்களில் பெரும்பாலோர் பேசும் மொழியைக் குறைவுபடுத்துவது; அவர்களது எண்ணிக்கைக்கேற்றபடி சர்க்கார் பதவிகளிலும் சட்டசபைகளிலும் நியாயமான பிரதிநிதித்துவம் கிட்டாமற்செய்வது. பொருளாதாரத் துறையிலும் அவர்களைப் பின்தங்கி நிற்கச் செய்வது; இவைபோன்ற நிகழ்ச்சிகளால் அவர்களது சமத்துவ வாழ்க்கை பாதிக்கப்பட்டு அவர்களின் நிலைகுன்றி வருகின்றது.

இவையெல்லாம் காங்கிரஸ் ஆட்சியின் அநீதியையும், ஆட்சித் திறனற்ற தன்மையையும் விளக்கி நிற்கின்றன.

சிறுபான்மை முஸ்லிம்களின் நிலை இங்ஙனமிருக்க, தற்சமயம் நாடு முழுவதுமே மிகுந்த கவலைக் கிடமான நிலையை அடைந்திருக்கிறது. நாடு முழுவதின் நன்மை உடனடியாகக் கவனிக்கப்படல் வேண்டும். நாட்டை இந்த நிலைக்குக் கொண்டு வந்துவிட்ட காங்கிரஸ் ஆட்சியை 1967 தேர்தலிலாவது அகற்ற வேண்டும். இல்லையெனில், தேசத்தின் நிலையும் மக்களது நன்மையும் இன்னும் மோசமாகிவிடும்.

காங்கிரசை ஆட்சியிலிருந்து அகற்றுவதென்பது அசாத்தியமல்ல. ஏனென்றால், இதுவரை நடந்த தேர்தல்களில் காங்கிரஸ் கட்சிக்குப் பெரும்பான்மை வாக்குகள் கிடைக்கவில்லை, எதிர்ப்பாளர்களுக்கே பெரும்பாகமான வாக்குகள் கிடைத்திருக்கின்றன. ஆனால் எதிர்ப்பாளர்கள் பிரிந்து பிரிந்து நின்றதனால், சிறுபான்மை வாக்குகளைப் பெற்ற காங்கிரஸ் கட்சி ஆட்சியைப் பிடிக்க சாத்தியப்பட்டு வந்தது.

தேசத்தின் நன்மையை உத்தேசித்து இனி அவ்வித நிலை ஏற்படக்கூடாதென்று இந்திய யூனியன் முஸ்லிம் லீக் ஒரு குறைந்த பட்ச திட்டத்தை முன் வைத்து எதிர்க்கட்சிகள் ஒன்று படல் வேண்டுமெனத் தீர்மானம் ஒன்று செய்தது

தேசத்தின் நலனுக்காகச் செயல்படுவதும் தேசத்தின் எல்லா மக்களும் சம்மான அந்தஸ்து, உரிமை, கடமை கொண்டு ஒன்றுபட்டு நாட்டின் நலனை வளர்ப்பதும் நோக்கமாகக் கொண்ட முஸலிம் லீக் தேசத்தின் உயரிய நன்மைக்கான இக்கூட்டு முயற்சியில் திடமாக முன்னிற்கின்றது.

கேரள மாநிலத்திலே முஸ்லிம் லீக் உட்பட ஏழு கட்சிகள் சேர்ந்து கூட்டுக் கொள்கையை ஒத்துக்கொண்டு செயல்படுகின்றன. இக் கூட்டு வெற்றிபெறுமென்பதில் ஐயமில்லை.

தேசத்தின் வேறு பல பகுதிகளிலும் கூட்டு சம்பந்தமான பேச்சுவார்த்தைகள் நடந்து வருகின்றன.

தமிழ்நாடு மாநிலத்தில் தி. மு. கழகம், சுதந்திரா கட்சி, முஸ்லிம் லீக் ஆகிய கட்சிகளின் கூட்டு ஏற்பட்டிருப்பதை மக்களறிவார்கள்- இக் கூட்டு ஏற்கெனவே கொண்டிருந்த தோழமையின் தொடர்ச்சி என்பதும் மக்களுக்குத் தெரியும். இக் கூட்டால் அடுத்த ஆண்டில் மக்களுக்கு இம்மாநிலத்தில் நல்லதொரு ஆட்சியை நிறுவ இயலும் என்பதில் சந்தேகமில்லை.

இக்கூட்டைப் பலவிதமாக கடினமாகத் தாக்குவதில் காங்கிரஸ் தலைவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள் என்றால் இக் கூட்டு எவ்வளவு பலமுடையது என்பதை அவர்கள் உணருகிறார்கள் என்றருத்தம்

தவிர, காங்கிரஸ் கட்சியினர் தேர்தல் நிதிக்காக பெரும் பணம் திரட்டி வருகின்றனர். நிலைமையைத் தெரிந்த மக்களின் நல்லாதரவு எதிர்க்கட்சி கூட்டணிக்கு இருப்பதால், எதிர்கட்சிகளுக்கு அவ்வளவு பெரும் பணம் தேவையில்லை யென்பது உண்மைதான் என்றாலும் தேர்தல்களை நடத்துவதென்பது சாமானியமல்ல. கணிசமான பண உதவி இல்லாமல் முடியாது. ஆட்சியாளர் கோடிக்கணக்கில் திரட்டினால் எதிர்கட்சியாளருக்கு லட்சக் கணக்கிலாவது தேவைப்படும்-ஆதலால்- நமது தோழமை கட்சியினரும் இதரர்களும் நிதி சேர்த்து வருகின்றனர்-அதுபோன்று முஸ்லிம் லீகுக்கும் தேர்தல் நிதி தேவை.

முஸ்லிம் லீக் தேர்தல் நிதி வசூலுக்காக, பொருளாளர் ஜனாப் ஹாஜி தை. அ. செ. அப்துல்காதர் சாகிப் அவர்களை கன்வீனராகக் கொண்டு ஒரு குழு நியமிக்கப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு மக்களின் நல்லாதரவு கிடைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சகோதர வாக்காளப் பெருமக்களே, ஏனைய சகோதரர்களே,

வரப்போகும் தேர்தலில் நாட்டுக்கு நல்லாட்சி ஏற்படுவதற்காக உங்கள் முழு ஆதரவைத் தாருங்கள்!

இந்தத் தலைமுறையுடையவும் பின்வரும் சந்ததிகளுடையவும் நலனைக் காப்பாற்ற முன்னின்று உதவுங்கள்!

தன்மானத்தைக் காத்துப் பெருமையுடன் வாழ வழி செய்வதற்காகத் தாராளமாய் உதவுங்கள்!

வெற்றி நம்முடையதே—

வஸ்ஸலாம்.

அன்புள்ள
உங்கள் சகோதரன்

(Sd) எம். முஹம்மது இஸ்மாயில்




## 7. ராடரிக்கின் சூளுரை!

மாறுவேடத்துடன் ஸ்பானியர் பாசறைக்குச் சென்று உளவறிந்து கொண்டு, ராடரிக் மன்னனுக்கு நிருபம் ஒன்றையும் கொடுத்தனுப்பி விட்டு, அதிகாலை வேளையில் தன் கூடாரத்துக்குத் திரும்பிய ஜூலியன் பிரபு தன் உடைகளைக் கூட மாற்றிக் கொள்ளாமல், உறங்கிக் கொண்டிருந்த தன் மகளருகே போய் நின்றான். அப்பொழுதுதான் தன் படுக்கையில் புரண்டுபடுத்த புளோரிந்தாவின் அழகு வதனத்தைப் பெருமையோடு கூர்ந்து பார்த்தான் ஜூலியன். இன்பக் கனவு எதனையோ கண்டு கொண்டிருப்பவளைப் போல அவளுடைய மலர் முகம் தூக்கத்திலும் மலர்ச்சியோடு காணப் பட்டது. உதடுகள் ஏதோ முணுமுணுப்பது போலும் தோன்றின.

"மகளே, உனக்கு இழைக்கப் பட்ட அவமானத்திற்குப் பழி வாங்கும் நேரம் நெருங்கி விட்டது. என் நிருபத்தைப் படித்து விட்டு ராடரிக் மன்னன் இப்போது துடித்துக் கொண்டிருப்பான். நீ நிம்மதியாகக் கண்ணுறங்கு!' என்று தனக்குள்ளாகப் பேசிக்கொண்டே, விலகிக் கிடந்த அவளுடைய கம்பளப் போர்வையை எடுத்து நன்றாகப் போர்த்தி விட்டான். ஆனால் அதுவே அவளுடைய தூக்கத்தைக் கலைத்துவிட, கண்விழித்துப் பார்த்தாள் அவள்.

மாறுவேடத்திலிருந்த ஜூலியனை அடையாளம் கண்டு கொள்ள சில விநாடிகளாயின அவளுக்கு.

"அப்பா, நீங்களா! முதலில் நான் திடுக்கிட்டுப் போனேன், எதிரி வீரர்கள்தான் யாரேனும் என்னைக் கவர்ந்து செல்ல வந்து விட்டார்களோ என்று. நீங்கள் உறங்கவே இல்லையா? ஏன் இந்த வேடமெல்லாம்? எங்கோ

சென்று விட்டு வருகிறீர்கள் போலத் தெரிகிறது?''

சட்டென்று எழுந்து அமர்ந்து அவ்வாறு கேட்ட மகளுக்கு உடனே மறுமொழி ஒன்றும் கூருமல் புன்னகை புரிந்து கொண்டு நின்ற ஜூலியனைப் பார்த்து அவள் மறுபடியும், ''என்னிடம் சொல்லக் கூடாத விஷயமா அப்பா அது? அப்படியானல் வேண்டாம்!'' என்ருள் அவள்

''உன்னிடம் சொல்லக் கூடாதது என்று அப்படி என்ன விஷயம் இருக்கிறது! நள்ளிரவில் புறப்பட்டு ராடரிக் மன்னனின் முகாமுக்குப் போய்விட்டு இப்போதுதான் திரும்பி வருகிறேன்!''

''அப்படியா? மன்னனைப் பார்த்தீர்களா?''

அவளுடைய குரலிலே அச்சமும் படபடப்பும் தொனித்ததைக் கண்டு தனக்கு ஏற்பட்ட நகைப்பை அடக்கிக் கொண்டு, ''இல்லை ராடரிக்கை நேரில் பார்க்க முடியவில்லை நான் கொண்டுபோன கடிதத்தை மட்டும் அவளிடம் சேர்ப்பிக்க ஏற்பாடு செய்து விட்டு வந்தேன்!' என்று பதிலளித்தான் ஜூலியன்.

புளோரிந்தாவின் உள்ளத்தில் முதலில் மின்னல் போலத் தோன்றி மறைந்த ஐயம் இப்போது உருக்கொண்டு நெளியத் தொடங்கியது!

''கடிதமா? என்ன விஷயமாக எழுதினீர்கள்? ராடரிக்குடன் ரகசிய ஒப்பந்தம் எதுவுமில்லையே!'' என்று ஒரே மூச்சில் கேட்டு முடித்த மகளைப் பார்த்துப் பெரிதாக வாய்விட்டே சிரித்துவிட்டான், ஜூலியன்!''

''பயந்து விட்டாயா, கண்ணே! அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. நான் கடிதத்தை எழுதி முடித்துக் கொண்டு புறப்படும் போது நீ ஆழ்ந்த உறக்கத்திலிருந்தாய் இல்லாவிட்டால் உன்னிடம் அக்கடிதத்தையே காட்டியிருப்பேன்! அங்குள்ள நிலைமையை நேரில் பார்த்து ஆராய்ந்து வந்து தக்க யோசனை வழங்குவதாக தளபதிக்கு வாக்களித்திருந்தேன். அதன் படியே புறப்பட்டுப் போனேன்!''

''என்னவெல்லாம் பார்த்து வந்தீர்கள்? நானும் உங்களிடம் கேட்க வேண்டுமென்று தான் நினைத்திருந்தேன்! ராடரிக் மன்னனின் பரமவைரியான வடக்கத்திய புரட்சி வீரன் பலாஜியஸும் கூட ஒரு படையைத் திரட்டிக் கொண்டு, அரபியரிடமிருந்து ஸ்பெயினைக் காப்பதற்காக வென்று ராடரிக்கின் சேனையோடு வந்து சேர்ந்து கொண்டிருப்பதாக சொல்கிருர்களே! நம் காவல் வீரர்கள் இன்று சொல்லக் கேட்டேன். பலாஜியஸின் பெயரைக் கேட்டாலே நடுங்கிக் கொண்டிருந்த மன்னனுக்கு அம்மாவீரனின் உதவியும் கிடைத்திருப்பது எதிர்பாராத அதிர்ஷ்டம் தானே!'

''எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. பிரதம பாதிரியார் நிக்கோலாஸின் முயற்சியால்தான் அவ்வாறு நடந்திருக்கிறது பலாஜியஸும் அவனுடைய வீரர்களும் மட்டுமே அரபியரைக் கடைசிவரை உண்மையாகவே எதிர்த்துப் போராடக் கூடியவர்கள்!''

இவ்வாறு கூறிய ஜூலியன் தான் கண்டறிந்து வந்த மற்ற விவரங்களையும் தன் மகளிடம் வர்ணிக்கத் தொடங்கினான்.



அதே நேரத்தில் ராடரிக் மன்னன் தன்னிடம் கொண்டு வந்து கொடுக்கப்பட்ட ஜூலியனின் நிருபத்தைப் படித்துவிட்டு எரிமலையெனக் குமுறி கோபத்தைக் கக்கிக் கொண்டிருந்தான். ஜூலியனிடமிருந்து நிருபத்தைப் பெற்று அதைத் திமோடமிர் இடம் கொண்டுபோய்ச் சேர்த்த வீரனைக் கண்டு பிடித்துத் தன் முன்பாகக் கொண்டு வந்து நிறுத்துமாறு கட்டளை பிறப்பித்தான். எதிரிஒற்றனைக் கண்டு பிடிக்கத் தவறியதோடு அவனுக்கு உடைந்தையாக இருந்ததற்காகவும் அவ் வீரனுக்குத் தகுந்த தண்டனை வழங்க விரும்பினான் ராடரிக்.

மன்னனைக் கொதித்து எழச் செய்த அக்கடிதத்தில் பின்வரும் வாசகம் கண்டிருந்தது.

"ராடரிக், உனக்குக் கடைசிக் காலம் நெருங்கிவிட்டதைத் தெரிவிக்கவே இக் கடிதத்தை நான் எழுதுகிறேன். உன்னுடைய படை வீடு முழுதும் நன்றாகச் சுற்றிப் பார்த்து விட்டேன். ஒரு லட்சம் பேர் கொண்ட கூலிப் பட்டாளம் ஒன்றைத் திரட்டிக் கொண்டு வந்திருக்கிறாய்! நாட்டுக்காகவோ, மன்னனுக்காகவோ எத்தகைய தியாகமானாலும் புரிவதற்கு ஆயத்தமாக வந்து போரிடத் துடிக்கும் வேகத்தை உன் வீரர்களிடம் காணோம். உன்மீது எள்ளளவு மதிப்போ விசுவாசமோ எந்த வீரனிடமாவது இருப்பதாக நீ நம்பினால் உன்னைப் போன்ற அறிவிலி எவனும் இருக்க முடியாது. ஏதோ திருவிழாஒன்றைப் பார்க்கக் கூடி இருப்பவர்களைப் போலக் காலம் கழிக்கிறார்களே அன்றி இன்னும் சில நாட்களுக்குள்ளாகவேனும் தொடங்கப் போகும் சண்டைக்கான எந்த ஏற்பாட்டையும் அவர்களிடம் நான் பார்க்க முடியவில்லை. அவர்கள் யுத்தம் புரிய வந்தவர்களாக இருந்தால் தானே! உனக்கு இப்போதே நான் சொல்லி வைக்கிறேன். சந்தர்ப்பம்கிடைத்தால் அவர்கள் எங்களோடு வந்து சேர்ந்து கொள்வார்கள் இல்லையேல் உன்னை நட்டாற்றில் விட்டு விட்டு ஒதுங்கிப் போய் விடுவார்கள்!

இவ்வளவுக்கும் பொறுப்பு நீயேதான். சதிசெய்து படுகொலைகள் பல புரிந்து அரச பதவியை அபகரித்துக்கொண்ட நீ அதோடு நிறுத்திக் கொண்டு நாட்டுக்கும் மக்களுக்கும் நல்லவை செய்வதில் நாட்டங் கொண்டிருந்தாயானால் இத்தகைய ஆபத்து உன்னை வந்து சூழ்ந்து கொண்டிருக்காது அப்படியே அரபியர் படையெடுப்பு ஏற்பட்டிருந்தாலும்உன்னுடைய எதிர்ப்புச் சக்தி இந்த அளவுக்கு மோசமாக இருந்திராது. காலம் கடந்துவிட்டது. இனி உன்னை நீயே திருத்திக் கொள்ள முடியாது. அழிவு ஒன்று மட்டுமே உன்னை அணைத்துக் கொள்ளக் காத்து நிற்கிறது!

ஒரு பொது எதிரியை எதிர்ப்பதற்கு உதவி கோரியும் மன்னர் குல வழக்கப்படி அரசவைப் பண்புகள் பயில்வதற்காகவும் என் செல்வி புளோரிந்தாவை உன்னிடம் அனுப்பினேன்.

நான் கேட்டனுப்பிய உதவியை எனக்கு அளிக்காததோடு என் மகளிடம் பண்பற்ற முறை

## திருமணம்

குழிபிறை திரு அருணாசலம் செட்டியார் அவர்களின் குமாரன் மாணிக்கம் என்ற பெரிய கருப்பனுக்கும் நச்சாந்து பட்டி திரு மாணிக்கம் செட்டியார் குமாரத்தி சாத்தம்மைக்கும் அண்மையில் சிறப்பாக திருமணம் நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

யில் பழக முயன்ருய்! இறுதியில் பரிகாரம் காண முடியாத தீங்கையும் அவளுக்கு இழைத்து விட்டாய்!

ஆப்பிரிக்க நாட்டிலேயே அரபியரை இறுதி வரை வெற்றிகரமாக எதிர்த்து நின்ற ஒரே வீர மன்னனின் அருமை இளவரசி புளோரிந்தா என்பது உனக்கு நினைவிருந்தால் எனக்கு இத்தகைய அவமானம் இழைக்கும் நெஞ்சத் துணிவு உனக்கு ஏற்பட்டிராது. தவறு இழைத்து விட்டாய் அதற்குத் தகுந்த தண்டனையை உனக்கு ஏற்படுத்தித் தந்து எங்களுக்கு ஏற்பட்ட அவமானத்தைத் துடைத்துக் கொள்ளக் காத்திருநதேன்

அந்த சந்தர்ப்பத்தை அரபியர் எனக்கு இப்போது அளித்திருக்கிருர்கள்!

புளோரிந்தாவை என்னிடம் திருப்பி அனுப்பும்போது, வேட்டைப் பறவைகளான உயர்ந்த ஜாதி ராஜாளிகளை உனக்கு வேண்டுமெனச் சொல்லி அனுப்பி இருந்தாய்! வேட்டையில் தன்னிகரற்றவைகளான ராஜாளிகள் பலவற்றை நான் வளர்த்து வருவதாகவும் வேட்டையாடத் தக்க பருவம் வந்ததும் அவற்றை நானே ஸ்பெயினுக்குக் கொண்டு வந்து சேர்ப்பதாகவும் உனக்கு பதில் எழுதி அனுப்பி இருந்தேனல்லவா? அந்தவாக்குறுதியை இப்போது நிறைவேற்றிவிட்டேன்! நான் குறிப்பிட்டது இந்தஅரபியரைத் தான். இந்த ராஜாளிகள் உன்னையும் உன்னைச் சார்ந்தவர்களையும் வேட்டையாடக் கூடியவை! போர்க்களத்தில் அவர்களைச் சந்திக்கும்போது நீ இதன் உண்மையை நேரில் கண்டு கொள்வாய்!"

இதைப் படித்துத்தான் ராடரிக் தன் வசமிழந்தான்.

ஜூலியன்எழுதிய வாசகங்கள் அவனை வெகுண்டெழச் செய்த போதிலும் சிந்திக்கவும் வைத்தன. அவை ஒவ்வொன்றும் அப்பட்டமான உண்மையாகப் பட்டன அவனுக்கு. அவனுடைய சேனையின் பலவீனம் அவனுக்குத் தெரிந்தே இருந்தது. எனினும் வெறும் எண்ணிக்கையைக் காட்டியே எதிரியை பயமுறுத்தி தியோடமிர், பலாஜியஸ் போன்ற சிறந்த வீரர்களின் உதவியைக் கொண்டு அரபியரை எப்படியும் வெற்றிகொண்டு அழித்து விட

லாம் என்றுதான் அவன் மனப் பால் குடித்துக்கொண்டிருந் தான். அவன் காண்பது வெறும் பகற்கனவுதான் என்று ராடரிக் ஓரளவு உணரும் படியாகச் செய் தது, ஜூலியனின் கடிதம்

அவன் போருக்குப் புறப்படு முன்பாக அவனுடைய இளம் மனைவி ராணி எஜிலோனு அவ னிடம் பேசிய விஷயங்களும் அப்போது நினைவுக்கு வந்தன அரசனுக்கு. இளவரசி புளோ ரிந்தாவிடம் அவன் நெறி தவறி நடந்து கொண்ட செய்தி அவளுக்கு எப்படியோ அப் போதுதான் தெரிய வந்திருந் தது. அதைப் பற்றித் தான் அவள் சந்தித்துப் பேச விரும்பி யது. அரசனை நேரில் கண்ட போது கேள்விமேல் கேள்வியாக வீசி அவனைக் கலங்கச் செய்து விட்டாள். நாட்டின்மீது படையெடுப்பு ஏற்பட்டதே புளோரிந்தாவுக்கு இழைக்கப் பட்ட அவமானத்தின் விளைவா கத்தான் என்று அவள் கேள்விப் பட்டதாகக் கூறிய போது அவளுக்குத் தகுந்த சமாதானம் சொல்ல முடியவில்லை அவனுல் !

யுத்தம் முடிந்து வெற்றிகரமா கத் திரும்பிய பிறகும் மன்னன் தன்னுடைய போக்கை மாற்றிக் கொள்ளாமல் ஒழுக்கம் கெட்ட வாழ்க்கையே நடத்துவனாகத் தெரிந்தால் தான் தன்னுடைய பெற்றோரிடமே திரும்பிச் செல் லப்போவதாக அவள் எச்சரித் தாள்.

எழிலரசி எஜிலோனுவை அவனுடைய பேரழகுக்காக மட்டுமன்றி அரசியல் கார ணங்களுக்காகவும் மணந்து கொண்டிருந்தான்மன்னன். ராட ரிக்கிற்கு எதிர்ப்பு மிகுந்த வட நாட்டைச் சேர்ந்த சிற்றரசர் களுள் செல்வாக்கு மிக்க ஒருவ னின் செல்வக் குமரி அவள். எனவே அவளுடைய தந்தை யின் விரோதம், யுத்தம் முடிந்த பிறகும் கூட, தனக்குவேண்டாத தொல்லைகளை யெல்லாம் தேடித் தரும் என்று அஞ்சிய அரசன் அவள் கேட்ட வாக்குறுதிகளை யெல்லாம் அளித்துவிட்டுப் புறப் பட்டு வந்திருந்தான்.

அதற்கு மேலும் அரபியரை எதிர்த்துத் தாக்காமல் அலட்சிய மாக விட்டுவைத்திருப்பது ஆபத் தான காரியம் என்று அப்போது தான் மன்னனுக்கு உணர்வு ஏற் பட்டது. தளபதி தாரிக் முதலில் ஏழாயிரம் பேர்களோடு மட்டுமே வந்து இறங்கியதும் அதன் பிறகு ஐயாயிரம் பேர்கொண்ட உதவிப் படை ஒன்று வந்து சேர்ந்து கொண்டதும் மன்னனுக்குத் தெரிந்திருந்தது. மேலும் தாம தித்தால் இன்னும் அதிகமான படைகள் ஆப்பிரிக்கக் கரையி லிருந்து அரபியரின் உதவிக்கு வருவது சாத்தியமே என்று நினைத்த ராடரிக் தன் ஆலோசகர் களோடு கலந்து பேசினுன்.

"அரபியர் மற்ற நாட்களைவிட நோன்புடன் பசித்திருக்கும் போதுதான் வெகு வீராவேசத் துடன் மூர்க்கத்தனமாகப் போர் புரிகிருர்களாம். இன்னும் நான் கைந்து தினங்களில் அவர்களு டைய விரத மாதம் முடிவதாகத் தெரிகிறது. எனவே இன்றி லிருந்து ஏழாவது நாளன்று நம் தாக்குதலைத் தொடங்கலாம்" என்றனர் அவர்கள்.

"அப்படியே செய்வோம்! வரும் ஞாயிற்றுக்கிழமை இந்த அரபி யருக்கும் அவர்களோடு சேர்ந்த துரோகியான ஜூலியனுக்கும் கடைசி நாளாக இருக்கட்டும்!" என்று சூளுரைத்தான், ராடரிக் மன்னன் ! (தொடரும்)

*"பத்திரிகைத் தொழில் ஒரு சூதாட்டம் போன்றது. நாளைக்கு நற்காலம் வரும் என்ற நம்பிக்கையுடன் இருப்பதையெல்லாம் இழந்து கொண்டிருக்க வேண்டும் அதாவது தன்னம்பிக்கை மிக அதிகமாக இருக்கவேண்டும்"*

*முஸ்லிம் முரசு ஜூலை '59 இதழின் முரசொலிப் பகுதியில் "ஹிந்து" ஆங்கில நாளிதழின் முன்னாள் ஆசிரியர் கே. சீனிவாசன் அவர்களின் மரணம் குறித்து அனுதாபம் தெரிவித்து எழுதுகையில் "முரசு" ஆசிரியர் எஸ். அப்துர் ரஹீம் (மர்ஹூம்) அவர்கள் இவ்வாறு எழுதியிருந்தார்கள்.*

*முஸ்லிம் முரசைத் தோற்றுவிக்கும் பணியில் காலஞ் சென்ற ஆசிரியர் அவர்களுடன் ஈடுபட்டுத் தொண்டாற்றிய ஜனாப் எம். ஆர். எம். தாஹிர் அவர்களின் இக்கட்டுரையைப் படிக்கும் போது மேற்கண்ட வரிகள் நம் நினைவுக்கு வருகின்றன. நம் பத்திரிகையின் ஆரம்பகால வரலாற்றை மட்டுமின்றி, அப்போது நிலவிய இந்திய அரசியல் நிலைமையையும் இது சுவைபட விளக்குகிறது.*

# ஆரம்பகால நினைவுகள்

இருபது ஆண்டுகளாக நிலைத்து நின்று சீரிய முறையிலே சமூகசேவை செய்தவரும் 'முஸ்லிம் முரசி'ன் ஸ்தாபகரும், ஆசிரியருமான அப்துர் ரஹீம் அவர்கள் நம்மைவிட்டு நிரந்தரமாகப் பிரிந்துவிட்டார்கள். ஆனால், அவர்களின் இடையருத உழைப்பின் பயனாக உருவான 'முரசு' அவர்களின் நினைவுச் சின்னமாக பல ஆயிரம் வாசகர்களின் கைகளிலே இன்று மிளிர்கிறது. ஒரு சிறந்த திங்கள் இதழை சமுதாயச் சொத்தாக நமக்களித்துப் போந்த ஆசிரியர் அவர்களின் அகால மரணம் குறித்து வருந்தும் இந்த நேரத்திலே, அவர்களின் ஆத்ம சாந்திக்கு அல்லாஹ்வின்பால் மனமுருகிப் பிரார்த்திக்கும் இந்த வேளையிலே முரசை உருவாக்கி, வளர்த்து நிலைபெறச் செய்ய ஆசிரியர் அவர்கள் எத்தகைய இன்னல்களை ஏற்றிருக்க வேண்டுமென்பதையும், அவர்கள் வாழ்ந்த வகை, வகுத்துக் கொண்ட வழிகள் பற்றியும் சிறிது நினைவுகூர்தல் பொருத்தமானதாக இருக்கும்.

ஆசிரியர் அவர்களின் அருங் குணங்கள் பற்றி அவர்களுடன் நெருங்கிப் பழகிய தோழர்கள் நன்கு அறிவர். ஆசிரியர் அவகளுடன் ஒரு முறை பழகும் சந்தர்ப்பம் பெற்றவர்கள் ஆசிரியர் அவர்களின் உளம் நிறைந்த உபசரிப்பாலும், கனிவுச் சிந்தும் சொற்களாலும் கவரப்படுவார்கள். தம்மைநாடி வருபவர்களுக்கு தம்மால் இயன்ற உதவி புரிதல். இன்னலுற்றவர்களுக்கு இன்சொல்லால் ஆறுதல் கூறுதல், உயர்வு தாழ்வு பேதம் பாராமல் எல்லாரிடமும் அன்பாகப் பழகுதல், விருந்தோம்பல் உறவினர்களை உபசரித்தல், அலுவலகச் சிப்பந்திகளை அன்புடன் நடத்துதல், குற்றங்களை மறந்து மன்னித்தல் ஆகிய எல்லா நற்குணங்களும் ஒன்று சேர்ந்த ஓர் உருவம்தான் ஆசிரியர் அவர்கள் என்று கூறினால் மிகையாகாது. சுருங்கச் சொன்னால் தமக்காக மட்டுமின்றி பிறருக்காகவும் வாழ வேண்டுமென்ற உயர்ந்த இலட்சியத்தை தமது வாழ்க்கைப்பாதையாக அமைத்துக்கொண்ட அல்லாஹ்வின் நல்லடியார் என்றுதான் கூற வேண்டும்.

இளமைப் பருவத்திலேயே எல்லோராலும் நல்லவர் என்று புகழ்ந்து கூறப்படும் அளவுக்கு ஆசிரியர் அவர்களின் பழக்க வழக்கங்கள் அமைந்திருந்தன. நேரத்தை வீணாக்காமல் நல்ல நூல்களைப் படிக்கும் பழக்கம் உடையவராக இருந்தார். அதன் பயனாக நல்ல தமிழில் வழுவில்லாமல் எழுதும் ஆற்றல் பெற்றிருந்தார். அந்த காலத்திலிருந்தே அரசியலிலும் ஈடுபட்டு வந்தார். அண்ணல் காந்தி, அபுல் கலாம் ஆஜாத், ராஜாஜி போன்ற அரும் பெரும் தலைவர்களின் தலைமையில் இயங்கிய அன்றைய காங்கிரஸ் கட்சி, ஆசிரியர் அவர்களின் உள்ளத்தைக்கவர்ந்தது. நாட்டு விடுதலைக்குப் போராடும் நல்லதோர் கட்சி காங்கிரஸ் ஒன்று தான் என்று ஆசிரியர் அவர்கள் நம்பினார்கள். அக்கட்சியின் மீது அவர்களுக்குள்ள பற்று எவ்வளவு ஆழமானது என்பதை எடுத்துக்காட்ட இந்த நிகழ்ச்சியொன்றே போதுமானது. காட்டுத் தீபோல் மிக வேகமாகப் பரவி இந்நாட்டு முஸ்லிம்களை கூட்டங்கூட்டமாக தன் பக்கம் ஈர்த்துக்கொண்ட முஸ்லிம் லீக், ஆசிரியர் அவர்களின் சொந்த ஊரான நாச்சியார் கோவில் முஸ்லிம்களைவிட்டுவைக்கவில்லை. தீவிர காங்கிரஸ் காரர்களாக இருந்த அவர்கள் லீகர்களாக மாறினர். அதன் விளைவாக அன்று வரை அந்த ஊரில் பறந்து கொண்டிருந்த மூவர்ணக் கொடியை அகற்றிவிட்டு பச்சைக் கொடியைப் பறக்க விடுவதென முடிவு செய்தனர். ஆனால், அப்துர் ரஹீம் அவர்கள் அம் முடிவை ஏற்க மறுத்ததோடு எதிர்க்கவும் முற்பட்டார்கள். ஆசிரியர் அவர்களின் எதிர்ப்பைப் பொருட்படுத்தாத அவ்வூர் வாசிகள் கொடியை அகற்ற முழுமினர். ஆசிரியர் அவர்களின் அன்புக்கும், மரியாதைக்குமுரிய சில பெரிய மனிதர்களும் இருந்தனர். அவர்களின் தயவு தாட்சண்யத்துக்குக் கட்டுப்பட்டு ஆசிரியர் அவர்கள் தமது எண்ணத்தை மாற்றிக்கொள்ளவில்லை. எதிர்ப்பைக் கைவிடவில்லை. அக்கூட்டத்தினரின் செயலை வன்மையாகக் கண்டித்து கொடியை அகற்றக் கூடாது என்று தடுத்தார் ரஹீம அவர்களின் செயல்கண்டு கூட்டத்தினர் கொதித்தெழுந்தனர். கோபம் கொப்பளிக்கும் ஆயிரம் கண்கள் ஆசிரியர் அவர்களை மிரட்டின. அவர்களின் அச் சுறுத்தலுக்கு அஞ்சாத ஆசிரியர் அவர்

கள் கொடிக்கம்பத்தைக் கெட்டியாகக்கட்டிப் பிடித்துக் கொண்டு "என் உயிர்போவதாயினும் சரி! இக் கொடியை இறக்கவிட மாட்டேன்" என்று ஆவேசத்துடன் கூச்சலிட்டார். ஆசிரியரின் துணிவுமிக்க இச்செயல் கூட்டத்தினரை திகைப்புறச் செய்தது. பந்த பாசத்தையும் கடந்த ஆசிரியர் அவர்களின் கட்சிப் பற்றைப் பாராட்டினர் பலர். ஆனால், அக்கட்சியின் மீது ஆசிரியர் அவர்கள் கொண்டிருந்த பற்றும் பாசமும் நெடுநாள் நிலைத்திருக்கவில்லை. சமய சார்பற்ற கட்சி, இந்நாட்டிலுள்ள எல்லா இனமக்களுக்கும் தலைமை தாங்க தகுதியுடைய கட்சி காங்கிரஸ் ஒன்றுதான் என்ற ஆசிரியர் அவர்களின் நம்பிக்கையை அக்கட்சியே தகர்த்தெறிந்துவிட்டது. ஆளுங் கட்சியாக மாறிய பின் அக்கட்சியின் போக்கு, எல்லா இன மக்களின் ஏகப்பிரதிநிதி ஸ்தாபனம் என்று கூறிக் கொள்ளும் அக்கட்சியால் ஒரு இனமக்கள் மற்றொரு இனமக்களால் கொன்று குவிக்கப்படுவதைத் தடுத்து நிறுத்த முடியாத நிலை, ஆகியவை ஆசிரியர் அவர்களின் மனதை மாற்றின.

ஒரு மாத இதழைத் துவக்க வேண்டுமென்ற எண்ணம் ரஹீம் அவர்களின் உள்ளத்திலே உதித்ததற்கு நாட்டின் அன்றைய நிலைதான் காரணமாக இருந்தது. நாடு சுதந்திரம்பெற்றது. நல்லாட்சி மலரும்; நமது வாழ்வும் உயரும் என்று எண்ணிய இந்திய முஸ்லிம்களின் எண்ணத்திலே இடிவிழுந்தது. சுதந்திரப் போராட்டங்களிலே தங்களின் செங்குருதியை ஆறெனஓட விட்ட அந்த முஸ்லிம்கள் ஆங்காங்கே படு கொலை செய்யப்பட்டனர். அண்ணல் காந்திஜி அவர்களின் ஆருயிரைக் குடித்த மதவெறி நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் கோரத்தாண்டவமாடியது. கோட்சேக்களின் கூட்டம் பெருகியது. இந்தியப் பிரிவினைக்கு இவர்கள்தான் காரணம் என்று கூறி முஸ்லிம்கள் பழிவாங்கப்பட்டனர். சமூக நல்லுறவுக்கு எடுத்துக்காட்டாக விளங்கிய இந்தத் தமிழ் மண்ணிலும் கூட காந்திஜி அவர்களின் படுகொலையையொட்டி விரும்பத்தகாத பல விளைவுகள் ஏற்பட்டன. முஸ்லிம்களின் மத, கலாச்சார, அரசியல் உரிமைகள் மறுக்கப்பட்டன. காங்கிரஸ் உச்சமட்ட தலைவர்களிலிருந்து பிளாட்பார பேச்சாளர் வரை 'இந்திய மண்ணிலே இஸ்லாமியருக்கு இடமில்லை!' என பகிரங்கமாகக் கூறினர். இந்நாட்டிலுள்ள பெரும்பாலான ஏடுகள் முஸ்லிம்களுக்கு எதிராகப் பிரசாரம் செய்வதிலும் மத துவேஷத்தை வளர்ப்பதிலும் ஒன்றோடு ஒன்று போட்டியிட்டன. ஆர். எஸ். எஸ். போன்ற இஸ்லாமிய ஒழிப்பு இயக்கங்களுக்குக் காங்கிரசின் உச்சிமட்ட தலைவர்கள் ஊக்கமளித்தனர். முஸ்லிம்களின்

உயிருக்கும் உடமைக்கும் பாது காப்பளிக்க அரசினர் தவறிவிட் டனர். பெரும் பான்மை இன மக்களைக்கண்டு சிறுபான்மை யிரான முஸ்லிம்கள் அஞ்சியஞ்சி வாழ வேண்டிய அவல நிலை ஏற் பட்டிருந்தது இப்படிப்பட்ட ஒரு பயங்கரமான சூழ்நிலை நாட் டில் நிலவ இருந்ததால் இந்திய முஸ்லிம்களின் எண்ணத்திலும் போக்கிலும் பெரும் மாறுதல் ஏற்பட்டுவிட்டது. என்றுமில் லாத சோர்வும், சஞ்சலமும், அவர்கள் உள்ளத்திலே குடி புகுந்து. அச்ச உணர்ச்சி அவர் களை ஆட்டிப்படைத்து. தன்னம் பிக்கையிழந்து தவித்தார்கள். தங்களின் அரசியல் வாழ்வு அஸ் தமித்துவிட்டதாகக் கருதினர். அரசியல் விவகாரங்களில் ஈடுபட் டால் என்ன ஆபத்து நேருமோ என்றஞ்சி அரசியல் துறவு பூண் டனர் 800 ஆண்டுகள் இந் நாட்டை ஆண்ட இனமக்கள் என்பதை மறந்து இந்நாட்டிலே நமக்குப் பங்கில்லையோ என்று எண்ணினர்.

இந்திய முஸ்லிம்களின் அன் றைய நிலை கண்டு சிந்திக்கத் தெரிந்தவர்கள் இரத்தக் கண் ணீர் வடித்தனர். இந்த நிலை நீடித்தால் இந்திய முஸ்லிம் களின் வருங்காலம் என்னவா கும்? என்று எண்ணிப் பார்த்த வர்கள் ஏங்கித் துடித்தனர்.

இந்திய முஸ்லிம்களின் இருள் சூழ்ந்த வாழ்க்கையையும், இந் நாட்டிலே அவர்கள் படும் அவ தியையும் கண்டு ஆசிரியர் அவர் களின் உள்ளம் கசிந்துருகியது சீர்திருத்த நோக்கமும், சிந்திக் கும் திறனும் பெற்ற அவர்களால் இந்நிலை குறித்து சிந்திக்காமல் இருக்க முடியவில்லை. முஸ்லிம் களின் தாழ்வு மனப்பான்மை யைப் போக்கி தன்னம்பிக்கை யூட்டவும், அவர்களின் அச்சம் நீக்கி அரசியல் உணர்வூட்டவும், தயக்கம் நீக்கி தலை நிமிர்ந்து நிற்கச் செய்யவும் ஒரு பத்திரிகை யல்ல பல சமூக பத்திரிகைகள் இன்று தேவைப்படுகின்றன என்பதை ஆசிரியர் அவர்கள் உணர்ந்தார்கள் இந்த உணர்வின் காரணமாக தமிழக முஸ்லிம்களுக்காகத் தாமே ஒரு பத்திரிகையைத் துவக்கினால் என்ன என்ற எண்ணம் அவர் களின் இதயத்திலே இடம் பெற் றது.

ஒரு நாள் மாலை நேரம். உயர் நீதிமன்ற திறந்த வெளி பசும் புல் தரையிலே அமர்ந்து ஆசிரி யர் அவர்களும் நானும் உரையா டிக் கொண்டிருந்தோம். எங்க ளின் அன்றைய உரையாடல் நாட்டின் நிலைபற்றியதாக இருந்தது அப்போது ஒரு மாதப் பத்திரிகை துவக்க வேண்டுமென்ற தமது எண் ணத்தையும், அதற்கான கார ணத்தையும ஆசிரியர் அவர்கள் என்னிடத்தில் விரிவாகஎடுத்துக் கூறி அவர்கள் முயற்சியிலே என்னையும் பங்கு பெறுமாறு கேட்டுக்கொண்டார்கள். "எழு தும் திறனை அல்லாஹ் எனக்கு அருள்கொடையாக அளித்துள் ளான். அதைக்கொண்டு என் இனமக்களுக்கு தொண்டு செய் வது என் கடமை என்று உணர் கிறேன்" என்று ஆசிரியர் அவர் கள் கூறினார்கள். ஆசிரியர் அவர்களின் உயர் நோக்கமும் தொண்டு மனப்பான்மையும் என் உள்ளத்தை நெகிழச் செய் தது, ஆசிரியர் அவர்களின் எழுத்து வன்மையிலும், செயல் திறனிலும் எனக்கு முழு நம் பிக்கை இருந்தது. எனவே, அவர்களின் முயற்சியிலே முழு மனதுடன் ஒத்துழைப்பதாக உறுதி கூறினேன்.

பத்திரிகையைத் துவக்க வேண்டுமென்ற ஆர்வமும்,

ஆசையுமிருந்த அளவு அதற்கானவாய்ப்பும்வசதியும் எங்களிடமிருக்கவில்லை. ஒரு சில உறவினர், நண்பர்களிடம் கடனுதவிப் பெறுவதென்று முடிவு செய்தோம். எங்களின் முடிவை எடுத்துக்கொண்டு அவர்களிடம் போனபோது ஏமாற்றம் தான் எங்களை எதிர்கொண்டழைத்தது. நாட்டு நிலை, அரசாங்கத்தின் போக்கு, தோன்றி மறைந்த சமூகப் பத்திரிகைகளின் எண்ணிக்கை ஆகியவைகளை எடுத்துக்காட்டி எங்கள் முயற்சியைக் கைவிடுமாறு பலர் கேட்டுக்கொண்டனர். பத்திரிகைத் துறையிலே பல வருடங்கள் ஈடுபட்டு நல்ல அனுபவம் பெற்ற ஒரு பெரியார் ஒரு சமூகப் பத்திரிகையைத் தோற்றுவித்து வெற்றி பெறுவது நீங்கள் நினைப்பதுபோல் அவ்வளவு எளிதான காரியமல்லவென்று எச்சரித்தார். ஆனால், எடுத்த காரியத்தைச் சாதிக்க வேண்டுமென்ற உறுதியுடனிருந்த ஆசிரியர் அவர்கள் இந்த அச்சுறுத்தலையும், எச்சரிக்கையையும் பொருட்படுத்தவில்லை மீண்டும் மீண்டும் முயன்றோம். பலரை அணுகினோம். ''நமது முயற்சி தன்னலமற்றது அல்லாஹ்வின் அருள் நமக்கு நிச்சயமாகக் கிடைக்கும்'' என்று ஆசிரியர் அவர்கள் அடிக்கடி கூறுவார்கள். அவர்களின் நம்பிக்கை பொய்க்கவில்லை. சில நல்ல தோழர்கள் உதவி செய்ய முன் வந்தனர். அவர்களின் உதவி சிறியதேயாயினும் மறக்க முடியாதது. முஸ்லிம்முரசின் தோற்றத்துக்கு முதல்உதவியாளர்களாகஇருந்த அந்த தோழர்கள் என்றென்றும் நன்றிக்குரியவர்கள்.

அல்லாஹ்வின் மீதும் அவனது நல்லடியார்களான தமிழக முஸ்லிம்களின் மீதும் முழு நம்பிக்கைவைத்துப் பத்திரிகையைத் துவக்கினோம். முஸ்லிம் முரசின் முதல் இதழ் 1948-ம் ஆண்டு ஜூலை மாதத்தில் மலர்ந்தது.

விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பதுபோல 'முஸ்லிம் முரசு' வளர்ந்து வான் புகழோங்கத் தகுதி படைத்தது என்பதற்கான அறிகுறிகள் அதன் முதல் இதழிலேயே காணப்பட்டன. முஸ்லிம்களுக்கு எதிராகப் பிரசாரம் செய்வதையே தங்கள் தொழிலாகக்கொண்ட ஏடுகளுக்கு 'முரசின்' முதல் தலையங்கத்திலேயே பதிலடி கொடுக்க ஆசிரியர் அவர்கள் முனைந்து விட்டார்கள். முதல் இதழ் தலையங்கத்திலே "முஸ்லிம்கள் என்றால், இன்று இஸ்லாத்தின் எதிரிகள் சிலர் நினைப்பதுபோல், 'முரடர்கள்' என்பது பொருளல்ல. 'ஆண்டவனின் சட்ட திட்டங்களுக்கு முற்றிலும் கட்டுப்பட்டு நடக்கின்றவன் என்பதுதான் முஸ்லிம் என்பதன் பொருள் என்றும் "இந்நாட்டுப் பத்திரிகைகளுக்கு ஒரு வேண்டுகோள் விடுக்கின்றோம். வீணில் துவேஷத்தை வளர்க்க வேண்டாம் என்பதுதான் அவ்வேண்டுகோள்" என்றும் எழுதி இருந்தார்கள். இருள் சூழ்ந்த தமிழக முஸ்லிம்களின் அரசியல் வாழ்விலே முரசின் தோற்றம் புத்தொளிபரப்பியது போலிருந்தது. என்பதை அவர்களிடமிருந்துவந்த ஆசிச் செய்திகளும் பாராட்டுக் கடிதங்களும் எடுத்துக் காட்டின. அடுத்த இதழில் வந்த தலையங்கம் ஆசிரியர் அவர்களின் நெஞ்சுத் துணிவையும். குற்றம் கண்டவிடத்து அச்சமின்றி எடுத்துக்கூறும் திறனையும் படம் பிடித்துக்காட்டியது. "பட்டேலின் பாதையில் பண்டிதர்" என்னும் அந்த தலையங்கத்திலே பண்டித நேரு அவர்கள் வன்மையாகக் கண்டிக்கப்பட்டிருந்தார். சென்னை மாநகருக்கு விஜயந்தந்த பிரதமர் நேரு கோட்டை மைதானத்திலே நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் பேசிய பொழுது இந்திய முஸ்லிம்களுக்கு எதிராக தீப்பொறி பறக்கப் பேசினார். இந்தியமுஸ்லிம்களின் தேசப் பற்றையும், விசுவாசத்தையும் கேலி செய்தார். அவர்கள் மனம் புண்படும்படி என்னென்ன பேசமுடியுமோ அவை

அனைத்தையும் பேசித் தீர்த்தார் இந்திய முஸ்லிம்களின் பரம வைரியாகத் திகழ்ந்த இரும்பு மனிதர் பட்டேலின் பேச்சு போலவே இருந்தது பண்டிதரின் பேச்சு. பண்டிதரின் இந்தப் பேச்சைக் கண்டித்துதான் ஆசிரியர் அவர்கள் தலையங்கம் தீட்டி இருந்தார்கள். இந்திய முஸ்லிம்களின் நண்பர், அவர்களின் பாதுகாவலர் என்று கருதப் பட்டுவரும் பண்டித நேருவே இப்படிப் பேசினால் இந்திய முஸ்லிம்களின் கதி என்னவாகும்? என்று எழுதியிருந்தார்கள். இந்த தலையங்கம் இந்திய முஸ்லிம்களின் இதயக் குமுறலை எதிரொலிப்பது போல் இருந்தது. ஆசிரியர் அவர்களின் அச்சமற்ற தன்மையைப் பாராட்டி வாசகர்கள் மட்டுமல்லாமல் பல தலைவர்களும் கூட பக்கம் பக்கமாக எழுதி இருந்தார்கள்

ஜனநாயக நாட்டிலே அரசியல் தலைவர்களையும், அமைச்சர்களையும் கண்டித்து எழுதுவது குற்றமாக மாட்டாது. அது சர்வ சாதாரணமாக நிச்சயமாக இன்று கருதப்படுகிறது. ஆனால், இந்திய முஸ்லிம்கள் நிலை இன்று இருப்பது போல அன்றிருக்கவில்லை. காஷ்மீர் ஹைதராபாத் ஜுனாகத் பிரச்சினைகள் உச்சகட்டத்திலிருந்த நேரம். இந்த நாட்டிலுள்ள ஐந்து கோடி முஸ்லிம்களும் ஐந்தாம் படையினராகக் கருதப்பட்டு அடக்குமுறைக்கு உள்ளாக்கப்பட்ட நேரம் காமாலைக் கண்ணனுக்கு காண்பதெல்லாம் மஞ்சள் என்பதுபோல் கண்ணில் படும் அத்தனை முஸ்லிம்களும் பாக்கிஸ்தான் உளவாளியாக கருதப் பட்ட நேரம். அப்படிப்பட்ட நேரத்திலே இந்த மாதிரி ஒரு தலையங்கம் தீட்டுவதற்கு எது வந்தாலும் ஏற்க சித்தமாக இருக்கும் உறுதி மனம் படைத்த ஒருவரால் தான் முடியும்.

இப்படியாகவே ஒவ்வொரு இதழும் பல நல்ல அம்சங்களையும், சிந்தனையைக் கிளறும் சீர்திருத்த அரசியல் கட்டுரைகளையும், சிறந்த இஸ்லாமிய இலக்கியப் படைப்புகளையும் தாங்கி வெளி வந்தது. ஒவ்வொரு இதழிலும் ஆசிரியர் அவர்களின் தனித்திறனும், எழுத்து வன்மையும் பளிச்சிட்டது! முதலாண்டு நிறைவதற்குள் 'முரசு' முழு வெற்றி பெற்றுவிட்டது என்று ஆசிரியர் அவர்கள் பெருமிதத் தோடு எழுதும் அளவுக்கு அது வளர்ந்து தமிழக முஸ்லிம்களின் இதயங்களிலே நிலையான இடத்தைத் தேடிக் கொண்டது.

தமிழக முஸ்லிம்களின் பேரபிமானத்தையும், ஆதரவையும் பெற்று முஸ்லிம் முரசு இன்று ஓர் உன்னத நிலைக்கு வந்து விட்டது என்று பெருமையோடு கூறுகிறோம். ஆனால், அதை இந்த நிலைக்குக் கொண்டுவர ஆசிரியர் அவர்கள் அடைந்த கஷ்ட நஷ்டம், புரிந்த தியாகம் எத்தன்மையது என்பதை எண்ணிப்பார்க்கவே நெஞ்சம் அஞ்சுகிறது. முரசு தோன்றிய நாள் முதல் ஆசிரியர் அவர்கள் துஞ்சிய நேரம் வரை அவர்களின் பேச்சும் மூச்சும் முரசின் வளர்ச்சியைப் பற்றியதாகத் தானிருந்தது. அவர்களின் முழு நேரத்தையும் முரசுக்காகவே அர்ப்பணிக்க வேண்டி இருந்ததால் அவர்களின் சொந்த நலன் மட்டுமல்ல,உடல் நலமும் பெரும ளவு பாதிக்கப்பட்டது. எனினும் ஆசிரியர் அவர்கள் அது பற்றி கிஞ்சிற்றும் கவலைப்பட்டதேயில்லை. ஆசிரியர் அவர்கள் நோய்வாய்ப் பட்டிருந்தபோது, முழு நேர ஓய்வு தேவைப்பட்ட போதுங்கூட முரசுக்கு அவர்கள் ஆற்றவேண்டிய அரும் பணியையாற்றியே வந்தார்கள்.

"எவனுடைய கையினாலும் வாயினாலும் இஸ்லாமிய சமூகம் மேன்மையடைகிறதோ அவனே உங்களில் சிறந்தவன்" என்னும் நபிமணியவர்களின் பொன் மொழிக்கிணங்க ஆசிரியர் அவர்

கள் தங்களின் வாழ்நாளின் பெரும் பகுதியை சமூக மேன்மைக்காக தியாகம் செய்ததன் மூலம் நம்முள் சிறந்தவராக வாழ்ந்து மறைந்துவிட்டார்கள். தியாகத்தின் சின்னமாக விளங்கிய அந்த சமூகத் தொண்டருக்கு சிறந்த மனிதருக்குத் தமிழக முஸ்லிம்கள் என்றென்றும் நன்றி செலுத்த கடமைப் பட்டுள்ளார்கள். ஆசிரியர் அவர்கள் சமுதாயச் சொத்தாக நமக்களித்துள்ள கிடைத்தற்கரிய பெருநிதியாம் முஸ்லிம் முரசைப் பேணிப் பாதுகாத்தலே அவர்களுக்கு நாம் செய்யும் சிறந்த நன்றியாக இருக்கும்.

570. பெண்கள் முடிந்த சமயத்தில் சிரிக்கிறார்கள்; விரும்புகிற சமயத்தில் அழுகிறார்கள்.
—ஜெர்மனி.

571. அழகானவை கஷ்டமானவை. —கிரீஸ்.

572. "என்னுடையது", "உன்னுடையது" என்பதில்லாவிட்டால் உலகம் சுவர்க்கமாக இருக்கும். —ஜெர்மனி.

573. நீ எதை விழுங்க முடியும், உன்னை எது விழுங்க முடியும் என்பதை நீ பார்க்க வேண்டும்.
—இந்தியா (தெலுங்கு)

574. ரொம்ப நேரம் ஆழ்ந்து சிந்தித்தால் முடிவு எதுவும் வராது. —ரஷ்யா.

575. விநாடியில் இழந்த கௌரவத்தை நூறு வருடங்களில் சரிப்படுத்த முடியாது. —இத்தாலி.

576. இளமையில் தவறான பலவற்றை நாம் நம்புகிறோம்; முதுமையில் உண்மையான பலவற்றை நாம் சந்திக்கிறோம். —ஜெர்மனி.

577. மற்றவர்கள் வைத்திருக்கும் பொருட்கள் நம்மை அதிகச் சந்தோஷப் படுத்துகின்றன; நாம் வைத்திருக்கும் பொருட்கள் மற்றவர்களை அதிகச் சந்தோஷப் படுத்துகின்றன. —இத்தாலி.

578. கௌரவம் கொடு, கௌரவம் கிடைக்கும்.
இந்தியா (தெலுங்கு)

579. மூடின பாலில் ஈ விழாது. —அல்பேனியா.

580. உண்மையான குடும்பப் பெண் ஒரே சமயத்தில் அடிமையாகவும் எஜமானியாகவும் இருப்பாள்.
—யுகோஸ்லாவியா.

581. மரத்திற்கும் மரப்பட்டைக்கும் இடையில் உன் கையை வைக்காதே (கணவன் மனைவிக்கிடையில்). —இங்கிலாந்து.

# ஆயிரம்

582. உன் அன்பை உன் மனைவியிடம் காட்டு, உன் இரகசியத்தை உன் தாயிடம் சொல்.
—அயர்லாந்து.

583. முதுமைக்கு நூறு கோளாறுகள். —வேல்ஸ்.

584. ஒவ்வொரு வியாதிக்கும் கடவுள் ஒரு மூலிகையைப் படைத்திருக்கிறார். —பல்கேரியா.

585. உன் எதிரி ஒரு எறும்பு போல இருந்தாலும் கூட, அவனை ஒரு யானையாகக் கருது.
—டென்மார்க்.

586. கொழுத்த வழக்கைவிட மெலிந்த சமாதானம் மேலானது. —ஹாலந்து.

587. சாவுக்குப் பயந்தவன் வாழ்வை இழந்து விட்டான். —எஸ்த்தோனியா.

588. பணம் அறிஞர்களுக்குச் சேவை செய்கிறது, முட்டாள்களை ஆட்சி செய்கிறது. —பிரான்ஸ்,

589. என்னிடம் பணம் இருந்த போது எல்லாரும் என்னைச் சகோதரன் என்று அழைத்தார்கள்.
—போலந்து.

590. கடவுள் ஒவ்வொரு பறவைக்கும் உணவளிக்கிறான், ஆனால் அதைக் கூட்டிற்குள் வீசுவதில்லை. —டென்மார்க்.

591. நீ எவ்வளவு அதிகமாகச் சாப்பிட்டாலும் சரி, விதைப்பதற்குக் கொஞ்சம் வித்துக்களை விட்டு வை. —ரஷ்யா.

592. நன்றிகெட்டவனுக்கு நன்மை செய்வது கடலுக்குள் பன்னீரை ஊற்றுவதுபோல. —இத்தாலி.

593. பானையின் கவலைகள் அகப்பைக்கு மட்டும் தான் தெரியும். —இத்தாலி.

(தேர்ந்த தமிழாக்கியவர்: எஸ். ஏ. சுலைமான், M. A.)

# பினாங்கு

# தாவூது ரெஸ்டாரண்ட்

மிக்க நேர்த்தியானது; மிக்க ருசிகரமானது என்று
மக்களின் நன்மதிப்பைப் பெற்ற சிறந்த
உணவகம்




புதிய மூன்று மாடிக் கட்டிடத்தில் ஏர்க்கண்டிஷன்
வசதியுடன்

# Dawood Restaurant

PHONE: 61617

**63 Queen Street, PENANG.**

# இந்திய முஸ்லிம் மன்னர்களின் நூலார்வம்

மொகலாயப் பேரரசின் மாமன்னராகத் திகழ்ந்த பாபர் சக்கரவர்த்தி, அரிய நூல்களைத் தம்முடன் பெட்டிகளில் போட்டு எடுத்துச்செல்வதுண்டு ஷேர்ஷாவிடம் தோல்வியுற்ற நிலையிலும், நூல்களை மட்டும் இழக்காமல் தப்பி ஓடி வந்து சேர்ந்தாராம். ஹுமாயூனுக்கு, வான நூலில் மிகுந்த ஈடுபாடு இருந்து வந்திருக்கின்றது. நூலகக் கட்டிடத்திலிருந்து படிகளில் இறங்கி வந்த பொழுது தவறி விழுந்து, அதனாலேயே உயிர் பிரிந்தது என்று கூறுகின்றார்கள். ஜஹாங்கீர் மஹால், எழுபத்தாறு அடி சதுர அரங்கைத் தன்னகத்தே வைத்துச் சுற்றிலும் இரண்டடுக்குகள் கொண்ட எழில் மாளிகைகளைக் கொண்டு திகழ்கிறது. இதன் கீழ்ப்புறம் படிப்பறையையும், நூலகத்தையும் கொண்டு இன்று விளங்கி வருகின்றது. நூல் சேகரிப்பில் அலாதி பிரியம் கொண்டிருந்தாராம். நூர் ஜஹானுக்கென்று, தனியாகவே நூலகம் இருந்து வந்ததாகவும் தெரிகின்றது. ஷாஜஹானின் நூலகத்தில் 24,000 நூல்களுக்குமேல் இருந்தன. இம் முறையில் வளர்ந்து வந்த நூலகத்தை, அவ்ரங்கஜேப் விரிவு படுத்தினார். அவர் மகள் ஜேபுன்னிஸா, தனிப்பிரிவையே கொண்டிருந்திருக்கின்றாள்.

இந்திய வரலாற்றில் பெயரும் புகழும் கொண்ட அக்பர் சக்கரவர்த்தி, தாம் எழுத்தறிவில்லாதவராக இருந்தும் கற்றலின் கேட்டலே நன்று' என்ற மொழிக்கிணங்க, தமது அவையில் கொண்டிருந்த அறிஞர்களை, நூல்களில் பொதிந்து கிடக்கும் கருத்துக்கள் பலவற்றையும் படிக்கும்படிக் கூறி, அறிவையும் தெளிவையும் பெற்று வந்தார். "உலகிலேயே இதற்கு ஈடான நூலகம் கிடையாது." என்று வரலாற்றாசிரியர் வின்செண்ட் ஸ்மித் குறிப்பிட்டுள்ளது இதன் பெருமையைக் கூறும். பாரசீக, அராபிய மொழி நூல்களைப் பொருள் கொடுத்து வாங்கத் தயங்குவது கிடையாது. நூலகத்தைப் பல பிரிவுகளாகப் பிரித்து வைத்திருந்தாராம். அபுல் பஸலும் நூலகத்தை விரிவு படுத்துகின்ற நல்லெண்ணம் கொண்டிருந்ததாகவும், அதற்காக உழைத்து வெற்றி கண்டதாகவும் அறிகிறோம்.

## தென்னக மன்னர்களின் தீவிர முயற்சி!

மொகலாயர்களைப் போலவே, தென்னக மன்னர்களும் நூல்களின் சிறப்பை உணர்ந்திருந்தார்கள். மாமன்னர் சிக்க தேவராஜ உடையார், மிகப் பெரிய நூலகத்தை நிறுவி ஆயிரக் கணக்கில் நூல்களைக்கொண்டிருந்தார். வரலாற்றாசிரியர்கள் இவைகளைத் திப்புசுல்தான் அழித்து விட்டதாகக் கதை கட்டினர் திப்பு சுல்தான். தமது நூலகத்தில் அராபிய, பார்ஸி, ஹிந்திமொழிக் கையெழுத்துப் பிரதிகள் பலவற்றோடு முஸ்லிம் அறநூல்கள், புத்தகக்கலை, இலக்கணம் மருத்துவம், வரலாறு ஆகிய பல பொருள் நூல்களையும் கொண்டிருந்தாராம். இவைகளில் பலவற்றை, ராயல் ஏசியாடிக் கழகம் பெற்று கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகங்களுக்கு அனுப்பிவிட்டு, மீதியைக் கிழக்கிந்தியக் கம்பெனியிடம் ஒப்படைத்தது.

—ஜி. விக்டர் இமானுவேல்.

நன்றி: புத்தக நண்பன்.

# கலைவாழ்வு வாழ்ந்த கவிஞர்

அல்ஹாஜ் சங்கு கே. எம். செய்யது அப்துல் காதர்

தமிழ்த் தாய்க்குப் பல பாவணி புனைந்து நலம் பெறச் செய்தனர் பண்டைச் சான்றோர். பிந்திய புலவர்கள் சமயச் சார்பாகப் பாடி ஒரு புதுமுறை கண்டனர். கால இயல்பில் உயிர் உள்ளன யாவும் மாறுவது இயல்பு. அந்நெறியில் இலக்கிய இயல்பிலும் மாற்றம் ஏற்பட்டு காவியங்களும், புராணங்களும் தோன்றின! பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குப்பின் சிற்றிலக்கியங்கள் பிறந்தன. இம் முறைகளில் எல்லாம் நம் இஸ்லாமியப் புலவர்களுக்கும் தக்க இடம் இருக்கின்றது. பெருங் காப்பியம் தந்த உமறுப்புலவர், பிந்திய சவ்வாதுப்புலவர், மீசல் வண்ணக் களஞ்சியம் போன்ற பல்லோர்கள் தம் பாவணிகளைத் தமிழ்த் தாய்க்குச் சூட்டி மகிழ்ந்தனர். இன்றையநாள் உலகில வாழும் கவிஞர் குழுவிலும், நம் இஸ்லாமிய அன்பர்கள் பலர் இருக்கின்றனர். ஆயினும் இவைகளுக்கிடையே. மறைந்து நிற்கும் மலர்போன்ற வாழ்வே அவர்கள் வாழ்வாகக் காண்கிறோம். பலர் கண்ணிற்படாது பழுத்த பழமாக, விரிந்த மலராக,நின்று வாழ்வை முடித்தவர் புலவர் ஆபிதீன், அன்னாருடன் யான் கொண்ட தொடர்பில் கண்ட சிலவற்றை உலகறியச் செய்வதே இக் கட்டுரையின் நோக்கம்.

உயிர்கள், தோன்றிய இடத்தையே இறுதியில் அடைகின்றன என்பர், எந்த இறைவன் பிறப்பித்தானோ அந்த இறைவனிடமே உயிர்கள் அடைகின்றன. புலவர் ஆபிதீன் புண்ணிய பூமியாகிய நாகூரில் பிறந்தார், வளர்ந்தார். வாழ்ந்தார், உலகில் உலாவி வந்தார், என்னோடு பழகி விடை. பெற்றார். பிரியுங் காலத்தில் "யான் என் பிறப்பிடம் (நாகூர்) செல்கிறேன்; பின்னர் பார்க்கலாம்" எனச் சொல்லிப் பிரிந்தவர் பிரிந்தவர்தாம்; திரும்பினார் அல்லர், அங்குத்தானே தம் வாழ்வை முடித்துக் கொண்டார்.

> பிறப்பெனும் ஐம்பூதச்
> சேர்க்கை—அதன்
> பிரிவினை தானடா சாவு
> மறவாதே இதுவும் ஓர்
> இயற்கை—நல்ல
> மதியைக் குழப்பிக்
> கொள்ளாதே.

என்று பாடிய அவர், தம் செயலால் அதனை விளக்கி தம் சொல்லால் நம்மைத் தெருட்டி நிற்கின்றார், அதுபற்றி மதியைக் குழப்பாது அவரின் ஏனைய சீரிய இயல்பு பற்றிச் சில கூறுவோம்.

பழம்புலவர்கள் கலைமகளையும், திருமகளையும் மருகியும், மாமியு

மாகக் கற்பனை செய்தல் ஒரு மரபு, கல்வியும், செல்வமும், சேர்ந்து நிலைப்பது அரிது என்பது இதன் கருத்தாகும். வள்ளுவரும், "திரு வேறு. தெள்ளிய ராதல் வேறு" என்று குறித்துள்ளார். இந்நியதி நம் புலவர் வாழ்விலும் நன்கு விளங்கி நின்றது. தக்க செல்வத்துடன் வளம் பொருந்த மலேயாவில் வாணிபத் துறையில் செழித்து வாழ்ந்த ஆபிதீனைக் கலை கவர்ந்தது. கலையுடன் உறவு அதிகமானதைக் கண்ட செல்வம் அவரைவிட்டு விலகியது. அவர் பாடிப்பாடி நாடோடி ஆனார்

மெச்ச மற்றவர் உம்மிடம்
யாங்கள்
பிச்சை வாங்கிட இல்லை
யாயின்
தருமம் எப்படி உலகில்
நிலவும் ?"

என்று தம் கொள்கைக்கு அரண் ஆகப் "பிச்சைக் காரர் பெருமையில்" பாடியுள்ளார். ஆயினும் நிலைபிறழாது நேர்மையுடையவராகவும் காலம், இடம், அறிந்து வேண்டுவன பெற்று வாழ்பவராகவும் விளங்கினர். அவருடைய புலமைத் திறனைக் கண்ட, அன்பர் பலர், ஒரு பொன்னாடை போர்த்தி அவரை உலகுக்கு அறிமுகப்படுத்த எண்ணினர். இக்கருத்தினை அறிந்து அவர் அவ்வன்பர்களிடம் "இன்றைநாள் வறுமையால் வாடும் எனக்குப் பொன்னாடை எதற்கு? யான் குளிரினால் நடுக்கமுற்றேனல்லேன். வறியவனுக்கு வயிற்றுச் சோற்றுக்கு வகை செய்ய வேண்டும். ஆடையை நீத்துப் பொன்னை ஈந்து போற்றுங்கள்" என்றார். இந் நிலையிலும் அவர் அறநெறி பிறழாமல் இன்னல்களையும் இன்பமாகவே எண்ணி, யாவும் இறைவன் திருவுள்ளம், என்று அவனிடமே முறையிட்டு வாழ்ந்தார்.

"ஆணவத்தின் முன்னே
தலைவணங்காப் பெரும்
ஆற்றலை ஈந்தருள்வாயே"

"சங்கடம் வந்திடில் சுலப
மாய்த் தாங்கிடும் சக்தியை
நீ அருள்வாயே"

என்ற இவ்வடிகளில் அமைந்துள்ள துணிவும், வீரமும், அவர் உள்ளத்தின் திண்மையைக் காட்டுவனவாகும்.

புலவருக்குப் பொன்னுடை போர்த்த விரும்பிய அ[illegible]கட்கு



அவர் கூறிய மற்றொன்று "அன்பரீர், புகழ் ஒரு பூமாலை போன்றது. காலை மலர்ந்து தோன்றும் பூ, மாலையில் வாடி வதங்கும். அத்தகைய புகழைத் தந்து மாலை உறுத்த வேண்டா" என்று வினயமாக விளம்பினார். வாழ்க்கை எளிய முறையில் நயமுற நடைபெற வேண்டும் என எண்ணினாரே அன்றி ஆடம்பரமாக வெளிச்சம் போட அவர் என்றும் விரும்பியதில்லை.

"ஆயிரம் ஆண்டு
வாழ்பவனென்று
பாயிரம் பெற்றும்
பிறந்தோமல்லோம்
இன்றோ அல்லது என்றோ
ஒருநாள்
சென்று மண்ணில்
சாய்வது உறுதி"

என்ற கருத்துக்கள் அவர் மனதில் ஆணி அடித்தாற்போல் பதிந்து நின்றன போலும். புகழை விரும்பாது உழைத்தல், யாக்கை நிலையாமையை உணர்தல், இந்த இரண்டும் அவரின் சீரிய கருத்துகளாய் என்றும் திகழ்ந்தன.

கவிஞர் மறைந்தார். அவர் எழுதிய பாக்கள் தரையில் ஊன்றப்பட்ட விதைகள்போல் இருக்கின்றன. விதைகள் முளைக்க வேண்டும். பூ காய்க்கவேண்டும் காய் கனியாகவேண்டும் அதற்கு நாம் வழி கோலாக வேண்டும். அவர் எழுதிய "அவுரங்கசீபு" "ஆத்மாவின் அசரீரி" "சர்க்காரின் போக்கு" என்னும் பாக்கள் மீண்டும் மீண்டும் படித்து இன்புறத்தக்கவை. அவர் பிறப்பித்த "அழகின் முன் அறிவு" "முஸ்லிம் லீக் பாடல்கள்" "இஸ்லாமியப் பாடல்கள்" பொன்றாமல் என்றும் நிலைக்க வகை காண வேண்டியது இஸ்லாமிய, மற்ற ஏனைத் தமிழ் அறிஞரின் கடமையாகும். சென்ற அன்பரை இனியான் காண்டல் அரிது. அவர் செய்யுட்களைப் படித்துச் சிந்தை மகிழ்ந்து வருகிறேன்.




## 7. எதிரிகளின் போர்த் திறன்! (2)

களத்திலிருந்து வீரவடுக்களுடன் முகாம் திரும்பிய பலருள் நக்கா கூட்டத்துக் கிழவியின் புதல்வர்களுமிருந்தனர். ஆனால், வெற்றியுடன் வரும் மைந்தரை வரவேற்பதற்குப் பதிலாக அவர்களின் வீர மரணத்தைப் பற்றி கேள்வியுற்ருர் கன்ஸா. அவருடைய புத்திரர்கள் நால்வருமே ஒருவரையடுத்து மற்ருெருவர் சமர் புகுந்து தீரமுடன் சண்டையிட்டு இறந்ததை அறிந்தார். பெற்ற பாசம் மிகுந்தவர் தாம் அவர். என்ருலும், அவருள்ளம் வேதனையால் வெம்பிவிடவில்லை. சோகத்தால் சோம்பிவிடவில்லை. அவர்களை ஈன்ற பொழுதிலும் பெரிதுவந்த அவ் வீரத் தாய் இறைவனிடம், தமது இருகரங்கள் விண்ணேக்கி உயர, இதயங் கனியப் பிரார்த்தித்தார்:

''யா அல்லாஹ்! உன் கருணையை என்னவென்று சொல்வேன்! வீர மரணமுற்ற தியாகிகளைப் பெற்றெடுத்த அன்னையென்ற சிறந்த புகழை எனக்களித்த உன்னை நான் எவ்வாறு புகழ்வேன்? உனக்கு நான் எவ்விதம் நன்றி யுரைப்பேன்?''

அவ்வேளை, கையிலே தீப்பந்தங்களை ஏந்தியவர்களாகக் களம் விரைந்தனர், முஸ்லிம் சேனையுடன் வந்திருந்த பெண்களும் சிறுவர்களும். ஆகாயத்தில் வட்டமிட்டுக் கொண்டே அருகிலிருந்த மரக்கிளைகளில் அமர்ந்திருந்த கழுகுகளைச் சட்டை செய்யாமல், களமெங்கும் காயப்பட்டுக் கிடந்தவர்களைத் தேடிப் பிடித்து அப்பாலிருந்த தங்களின் கூடரங்களுக்குக் கொண்டு வந்து சேர்த்தார்கள். அவ்விடங்களுக்கும் களத்திற்குமாகப் பலமுறை போய் வந்தனர். காலம் தாழ்த்தாமல் அவ்வீரர்களுக்குத் தக்க சிகிச்சைகளை செய்தார்கள். அவர்களின் காயங்களுக்கு மருந்து வைத்துக் கட்டினுர்கள்.

பொழுதுவிடிய, அப் பெண்களும் சிறுவர்களும் மீண்டும் சுறுசுறுப்புடன் இயங்கினர். மளமள

வென்று அவர்கள் தோண்டிய குழிகளில், களத்திலே உயிரற்றுக் கிடந்த முஸ்லிம்களின் சடலங்கள் எடுத்து வரப்பட்டு அடக்கம் செய்யப்பட்டன.

அவ்வாறு ஒருபுறம் நடந்து கொண்டிருக்க, மறுபடியும் போருக்கான ஆயத்தங்கள் மாமூலாக நடக்க ஆரம்பித்தன.

திடீரென, களத்தின் மேற்புறமாக அணிவகுத்து நின்ற முஸ்லிம் வீரர்களிடையே ஒரு பரபரப்பு! அவர்களில் பலர் உற்சாகமுடன் கூவினர்:

“இதோ நமக்கு உதவிப் படைகள் வந்துவிட்டன!”

மகிழ்ச்சி பொங்க அவர்கள் சுட்டிக்காட்டிய திசையில் ஒரு சில நூறு குதிரைவீரர்களும் ஒட்டக வீரர்களும் காற்றெனப் பாய்ந்துவந்து கொண்டிருந்தார்கள்.

ஒரு நொடியில் அவர்கள் முஸ்லிம்களின் கூடாரங்களை வந்தடைந்தனர்.

“நாங்கள் ஷாமிலிருந்து வருகிறோம். இங்கு செல்லும்படி கலீபா அவர்களிடமிருந்து உத்தரவு வந்தது” என்றவாறு தங்கள் குதிரைகளிருந்து கீழே இறங்கினர் அவ்வுதவிப் படைவீரர்கள். அவர்களின் தலைவர் உடனே தளபதியார் ஸஅதிடம் சென்று தங்களுடைய வருகையை அறிவித்தார்—

“இன்னும் பின்னால் வந்து கொண்டிருக்கிறார்கள் ... மொத்தம் நாங்கள் ஆறாயிரம் பேர்கள்.”

“அப்படியா? நல்ல சமயத்தில்தான் நீங்கள் வருகிறீர்கள்!” என்றார் தளபதியார்.

அந்த ஆறாயிரம் பேர்களும் சேர்ந்து வரவில்லை. பலபிரிவுக

ளாக விட்டுவிட்டுத் தொடர்ந்து வந்துகொண்டே இருந்தனர். அதைக்கண்டு புதியதொரு உற்சாகத்துடன் அன்றைய போரில் ஈடுபட முனைந்தனர் முஸ்லிம்கள். அவர்களைப் புதிய நம்பிக்கையுடன் படை இயக்கத் துவங்கினார் ஸஅத். ஆம், முன்னாள் போரில் மடிந்த வீரர்களுக்கு ஈடுசெய்வதைக் காட்டிலும் அதிகமான எண்ணிக்கையில் அன்றோ ஷாமிலிருந்து உதவி வீரர்கள் வந்து கொண்டிருந்தனர்!

இம்முறை முஸ்லிம்களை எப்படியும் அடியோடு முறியடித்துத் திரும்ப வேண்டுமென முழு மூச்சுடன் இஸ்லாமியச் சேனையை நோக்கிப் பகைவர்களின் நடு அணியைச் சேர்ந்த குதிரை வீரர்களும் காலாட்களும் ஆக்ரோஷமுடன் இராட்சத அலைகளைப்போலப் பொங்கி வந்தனர். அப்பேரலைகளால் அலைக்கழிக்க முடியாத கற்பாறைபோல நிற்க முயன்றனர் முஸ்லிம்கள். 'வெற்றி அல்லது வீர மரணம்' என்ற நிலையில் போராடினர்.

தங்கள் மீது எதிரிகள் நடத்திய பலத்த தாக்குதலை எவ்வளவு தீரமுடனும் நெஞ்சுறுதியுடனும் முஸ்லிம்கள் எதிர்த்து நின்ற போதிலும் என்ன! அப்பகைவர்கள் மீது அழுத்தமான எதிர்த் தாக்குதலை நடத்தி அவர்களை நிலைகுலையச் செய்ய வேண்டாமா? அப்படியொரு எதிர்த் தாக்குதலை நடத்திவர ஷாம் படைவீரர்களுக்குத் தளபதியாரின் உத்தரவு வந்தது. அக்கட்டளையை ஏற்று பாரசீகப் படை அணிகளை நோக்கி உத்வேகமுடன் பாய்ந்து சென்றனர், ஷாம் வீரர்கள் அவர்களுடைய கைகளிலிருந்த வேல்களும் வாட்களும் ஆயிரக்கணக்கான எதிரிகளின் உயிர்களைக் குடிக்கத் துடிதுடித்தன. ஆனால் எதிரிகளைப் பலமாகச் சாடி அடிக்கும் அளவுக்கு அன்னவர்களை நெருங்கிச் செல்லத் தங்கள் புரவிகள் அஞ்சித் தடுமாறுவதைக் கண்டனர் அவர்கள். என்னதான் அவைகளின் விலாவிலே அங்குசங்களை நெருக்கியும் அவற்றின் லகானை இறுக்கி இழுத்தும் அவை பாரசீகச் சேனைக்கு முன் நின்று கொண்டிருந்த சதைக் குன்றங்களைக் கண்டு மிரண்டு முரண் செய்யத்தான் செய்தன.

'இதற்கொரு வழி காண வேண்டுமே!' என்ற நினைப்பில் தங்கள் நிலை திரும்ப ஆரம்பித்தனர் ஷாம் படையினர். அவர்களை விரட்டி வந்த ஒரு பாரசீகப்படையை பின்னிருந்து தாக்க முன் பாய்ந்தனர் மற்றொரு முஸ்லிம் அணியினர். மேலும் கொஞ்ச தூரம் ஓடுவதுபோல ஓடிப் பின்னர் சடாரெனத் திரும்பினர் ஷாம் வீரர்கள். நடுவில் அகப்பட்டுக் கொண்ட பாரசீகப் படையின் நிலைமையானது 'தப்பித்தோம் பிழைத்தோம்' என்றாகியது.

தங்கள் படை நிலை திரும்பிய ஷாம் வீரர்கள் வாளாவிருக்கவில்லை. பாரசீகர்களின் யானைப் படையை எவ்விதம் சமாளிப்பதெனப் பலவாறு ஆராய்ந்தனர்.

"நம் குதிரைகள் அந்த யானைகளைக் கண்டு அவ்வாறு ஏன் அஞ்சவேண்டும்? இதற்கு முன் அவை அத்தகைய பயங்கர மிருகங்களைப் பார்த்திருந்தால் தானே! அப்படியென்றால், அந்த யானைகள் இதுவரை கண்டிராத பயங்கரத் தோற்றத்தை அம்மிருகங்களுக்கு நாம் காட்ட வேண்டுமா, இல்லையா? இதற்கு என்ன செய்யலாம்?' — நெடுநேரமாகப் பலர் தங்கள் மூளைகளைக் குழப்பிக் கொண்டிருந்தனர். முடிவில் அவர்களுக்கு ஒரு வழி தென்பட்டது.

உடனே அவ்வெண்ணத்தைச் செயல் படுத்த முனைந்தனர், ஷாமிலிருந்து வந்திருந்த உதவிப் படையினர்.

சற்றைப் பொழுதில், பலநூறு கோர உருவங்கள், ஈட்டிகளும் வாட்களுமேந்திய வீரர்களைச் சுமந்து கொண்டே பாரசீகர்களின் யானை வரிசைகளை நோக்கி விரைந்தோடத் துவங்கின. அவற்றின் பின்னே அணியணியாகக் குதிரை வீரர்களும் காலாட்படையினரும் வேகமுடன் பாய்ந்து சென்றனர்.

கூனல் முதுகும், வளைந்த கழுத்தும், நீண்ட முகமும் கொண்டு நெடிதுயர்ந்த மெல்லிய கால்களால் நீண்ட எட்டுக்களுடன் கோணல் நடைபோடும் ஒட்டகங்களின் உடல்கள் தரைவரையில் நீண்டு தொங்கிய பெரிய கருப்புப் போர்வைகளால் போர்த்தப்பட்டிருந்த நிலையில், அவை ஒருவிதப் பயங்கரத் தோற்றம் பெற்றிருந்தன. அவற்றைக் கண்ட யானைகள் பயந்து கொண்டு பிளிறின. அப்போது மிகுந்த உற்சாகம் கொண்டு வெகு தீவிரமாகத் தாங்கள் வாட்களை வீசியும் வேல்களை நீட்டியும் யானைப் படையைத் தாக்லுற்றூர்கள் முஸ்லிம் வீரர்கள். அவர்களை நோக்கித் தங்கள் யானைகளைச் செலுத்த முயன்றனர் அதன் மீதிருந்த பாரசீக வீரர்கள். ஆனால் அவ் வேழங்களோ அச்ச மிகுதியால் தங்கள் படர்ந்த பாதங்களைத் தரையில் அழுத்தியவையாக முன்னேற மறுத்தன. கட்டுக்கடங்காமலிருந்த அம்மிருகங்களைச் சமாளிப்பது வெகு கஷ்டமாக இருந்த நிலையில், தங்களைத் தாக்கிய முஸ்லிம்களைச் சரியான முறையில் எதிர்த்துச் சண்டையிட முடியவில்லை, அந்த யானைப் படையினரால். அவர்களில் பலர் மடிந்து வீழ்ந்தனர்.

இனி எந்த நேரமும் முஸ்லிம்கள் யானை வரிசைகளை ஊடுருவலாம் என்பதைக் கண்ட பாரசீகர்கள் வஞ்சின முற்றனர். தங்களைத் தாக்க வந்த முஸ்லிம்களைவிட அதிகமான அளவு திரண்டு முன் பாய்ந்தனர்.

வளர்ந்து வரும் நாளின் வெம்மையைப்போல போரின் வேகமும் சூடு கண்டது. அந்நிலையில் முஸ்லிம்களும் பாரசீகர்களும் ஒருவருக்கொருவர் சளைக்காமல் மிக நெருங்கி இறுக்கமாகக் கைகலந்து நின்றனர். சமயங்களில் முஸ்லிம்களும்சமயங்களில் பாரசீகர்களும அழுத்திவரும் எதிரிகளால் பின் தள்ளப்பட்டனர். மீண்டும் புது உத்வேகமுடன் கடுமையாகச் சண்டையிட முன்னேறினர்.

அதுவரை நடந்த கைகலப்புகளிலே தங்களுக்குச் சேதம் அதிகமானதைக்கண்ட பாரசீகர்கள், நிலைமையை மேலும் முற்ற விடக் கூடாதென்ற எண்ணத்தின் வேகத்திலே, ஏகசமயத்தில் பல அணிகளை ஒன்றாகச் சேர்த்தவர்களாக முஸ்லிம்களின் படைகளை நோக்கி அடர்ந்தேறினர். (தொடரும்)

# ரஹீமே! நீ சாகவில்லை! சாகமாட்டாய்!

தூத்துக்குடி
எம். முஸ்தபாஹுசைன்

எழுத கைகள் நடுங்குகின்றன! நம்ப முடியுமா? நம்பித்தீர வேண்டியதாயிற்று! நடக்க முடியுமா? நடந்தேறியேவிட்டது. அந்தோ! கடத்த இருபதாண்டுக்காலமாகத் தொடர்ந்து 'முரசு' ஒலித்துக் கொண்டிருந்த எழுச்சிக் குரலாம் என்னருமந்த ரஹீமே! உனது இதய ஒலி நிரந்தரமாக நின்று விட்டதுவே! புன்முறுவல் பூத்த உன் இன்முகத்தை காலக்கள்ளன் கவர்ந்து சென்றுவிட்ட கொடுமையை யாரிடம் சொல்லி அழுவது? உனது திடீர்மறைவால் என் போன்ற ஆயிரமாயிரம் நண்பர்கள், வாசகப் பெருமக்கள், தங்கள் இருவிழிகளும் அணைந்த உணர்வில், திகைத்துத் திண்டாடி ஏங்கித் தவித்து நிற்கிறார்கள். இதுவரை தமிழக இஸ்லாமிய சமுதாயத்தில் வேறெதனாலும் சாதிக்க முடியாத ஒன்றை உன் எழுத்தாற்றலால் நெஞ்சழுத்தத்துடன் சாதித்துக் காட்டிய துணிகரச் சிற்பியே! நீ எங்கு போய் மறைந்தாய்? எப்படியப்பா உன்னை சாவு அரவணைக்கத்துணிந்தது? யாரால் ஒரு பத்திரிகைத் தன்னந்தனியாக ஆரம்பித்துத் தொடர்ந்து பல்லாண்டுகளாய் வெற்றிப்பாதையில் இயக்க முடிந்ததோ அந்த உண்மை ஊழியனை, உத்தம ஆசிரியரை சமுதாயம் இழந்து விட்டது. எந்த அன்பு நம்மையெல்லாம் கவர்ந்ததோ அந்த அன்புருவம் மறைந்து விட்டது! எந்த சக்தி நம்மையெல்லாம் காந்தம் போல் இழுத்ததோ அந்த சக்தி ஓடி ஒளிந்துவிட்டது.

முஸ்லிம் பெருமக்களின் மறைவுச் சேதியினை 'முஸ்லிம் முரசில்' பிரசுரித்து தேம்பியழும் தென்னகத்து மக்களுக்கு தேற்று மொழிகூறிய கருணைமணி ரஹீமே! உனது திடீர் மறைவால், நிலை தடுமாறித் தேம்பித் துடித்துக் கதறியழுது கொண்டிருக்கும் உன் குடும்பக் குலக்கொழுந்துகளை, அன்புத் துணைவியை, அருமைச் சகோதரர்களை உற்றாரை, உறவினரை, மற்றுமுள்ள லட்சோபலட்ச 'முரசு' வாசகர்களைப் பார்த்து ஆறுதல் அளித்து அநுதாபங் கூற இன்று இங்கு யார் இருக்கிறார்கள்? உன் பிரிவுத் துயரால் வீடு அழுகின்றது; ஊர் அழுகின்றது; 'முரசு' வாசகருலகமே வாய்விட்டு

அழுகின்றது. பிரிவுப் புண்ணை ஆற்றவும், கண்ணீரைத் துடைக்கவும் காலமும், கடவுளும்தான் துணை புரிய வேண்டும். வீடு ஒரு நல்ல உத்தம புருஷனை இழந்தது. நாடு ஒரு நல்ல நாணயஸ்தனை இழந்தது. பத்திரிகையுலகம் ஒரு திறனுய்வுமிக்க, ஆன்றமைந்த ஆசிரியப் பெருமகனை இழந்தது. எழுத்துலகு, ஈடு இணையற்ற ஒரு புதுமைப் புரட்சி எழுத்தாளனை இழந்தது. நண்பர் குழாம் நேர்மையும், வாய்மையுமிக்க நேசமிகுத் தோழனை இழந்தது.

எல்லோருடைய இதயங்களிலும் குடிபுகுந்துவிட்ட உத்தமன் ரஹீமே! நீ சாகவில்லை! நீ சாகவே மாட்டாய்!!

எங்கள் இதயத்தில் நிரந்தரமாய்க் குடியிருக்கும் அன்புச் சின்னம் நீ! முஸ்லிம் முரசின் மூலமாக சிரஞ்சீவித்துவம் பெற்றுவிட்ட தத்துவம் நீ! நீ ஏற்றிவைத்த 'முஸ்லிம் முரசு' என்ற தீபத்தை அணையாமல், அழியாமல், பாதுகாத்து வருவதே உன் ஆத்ம சாந்திக்கு நாம் செய்யும் கைமாறு. நீ உயிரோடிருக்கும்போது 'முரசுக்கு' எழுத பன்முறை என்னைப் பணித்தாய்! நான் எழுத முடியவில்லை. ஐயகோ! உன் மரணசாசனத்தைத் தீட்டத்தான் என் கரம் பணிய வேண்டுமா? மீளாத் துயரில் ஆழ்ந்துகிடக்கும் எனக்கு வேறு எதுவும் இச் சந்தர்ப்பத்தில் எழுதத் தோன்றவில்லை.

"அன்புக்கு விளைநிலமாய், அமுத ஊற்ருய்
அடக்கத்தின் பெட்டகமாய், உயர்வு தேக்கும்
பண்புக்கு இருப்பிடமாய் பகைமை வெல்லும்
பரிவுக்கு நிலைக்களமாய், அழகு மிக்க
இன்பத்தின் மலர்ப்பொழிலாய், எண்ணுந் தோறும்
இதயத்தைக் குளிர்விக்கும் தென்றலாக
என்றென்றும் எம்வாழ்வில் நிறைந்து வாழ
இசைந்திட்ட **ரஹீமே!** எங்கே சென்ருய்?

—*சாரணபாஸ்கரன்.*

"நாளை வரக்கூடிய மறுமைக்காக கையிலிருக்கும் இம்மையை உதறித் தள்ளுவது அறிவுடைமையல்ல!" என்பது "பகுத்தறிவாளர்"களின் கூற்று.

"அவர்கள் மறுமையை விற்றுவிட்டு இம்மையை வாங்கிக் கொண்டார்கள்" என்று இடித்துரைக்கிறது திருமறை.

இம்மை மறுமை இரு வாழ்வுகளிலும் எது உயர்ந்தது என்பதை தக்க மேற்கோள்களுடன் அலசிக் காட்டி முடிவு கூறுகிறார்கள், இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள். தமது "இஹ்யா"வில். "அறிவும் தெளிவும்" என்னும் தலைப்பில் யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் அடுத்து வெளியிடவிருக்கும் நூலின் முதல் அத்தியாயத்திலிருந்து ஒரு பகுதி கீழே தரப்படுகிறது.

# மதியும் மயக்கமும்!

தமிழாக்கம்:

மௌலவி எஸ். அப்துல் வஹ்ஹாப் (பாக்கவி)

மனிதனின் சிறப்பை அவன் பெற்றிருக்கும் மதியே உயர்த்துகிறது. தெளிந்த மதியும் தூய்மையான சிந்தனையும் பெற்றவர்கள் என்றைக்கும் சமுதாயத்தில் உயர்த்தி வைத்துக் கணிக்கப்படுகிறார்கள். இந்த மதி எப்போதும் தன்னுடைய நிலையில் இருக்க வேண்டும். அதில் மயக்கமும் கலக்கக் கூடாது; குழப்பமும் தோன்றக் கூடாது. இல்லையேல் அந்த மதிக்கு மதிப்பு கிடையாது. ஏனெனில் தெளிவில்லாத சிந்தனையாலும் குழம்பிய மதியாலும் சமுதாயத்துக்கு எந்த நன்மையும் கிடையாது.

எனவேதான் திருக் குர்ஆன் மதிமயக்கத்தை வன்மையாகக் கண்டிக்கிறது.

"உலக வாழ்க்கை உங்களை மதிமயக்கத்தில் ஆழ்த்தி விடக் கூடாது..." என்பது திருமறையின் வசனங்களில் ஒன்று. இந்த வசனம் ஒன்றே மதிமயக்கத்தின் நிலையைத் தெளிவாக எடுத்துக் காட்டுவதற்குப் போதுமானது.

"மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு மறுமைக்காகச் செயலாற்றுகிறவனே புத்திசாலி. மனம்போன போக்கில் நடப்பவனே முட்டாள்" என்று பெருமானார் குறிப்பிடுகிறார்கள்.

அனுபவத்தை வைத்துப் பார்க்கும்போது, மனம்போனபடி நடக்கிறவர்கள் எல்லோரும் மதிமயக்கம் கொண்டவர்களா கவே இருக்கிறார்கள்.

அறிவின் சிறப்பை எடுத்துக் காட்டும் கருத்துரைகளும் எண்ணற்றவை. அவை ஒவ்வொன்றும் மதிமயக்கத்தைக் கண்டிக்கின்றன. ஏனெனில் மதிமயக்கம் என்பது அறியாமை யால் உருவாகும் ஒன்று. அறியாதவர்கள் நல்லதைக் கெட் டது என்று எண்ணுவதுபோல், மதிமயக்கம் கொண்ட வர்கள் நேர் வழியை முரண் வழி என்று எண்ணுகிறார்கள். செய்ய வேண்டிய காரியத்தை விட்டுவிட்டுச் செய்யத் தகாத காரியங்களைச் செய்து முடிக்கிறார்கள்.

மக்கள் மத்தியில் தெளிந்த மதியுள்ளவர்கள் ஒருசிலரே. மதிமயக்கம் கொண்டவர்களே அதிகம்.

மதிமயக்கம் கொண்டவர்களின் பட்டியலில் முதலிடம் பெறுகிறவர்கள் நேர்மையை மதிக்காதவர்கள். அவர்கள் உலக வாழ்க்கை குறித்து கொண்டிருக்கும் கருத்து தப்பானது; உண்மைக்கு முரணானது. காணும் பொருளிலெல்லாம் கேட் கும் இசையிலெல்லாம் இறைந்து கிடக்கும் இன்பங்களுக்கு அவர்கள் அடிமையாகிவிட்டார்கள். உலகமும் அதிலுள்ள இன்பங்களும் மனிதனுக்காகத்தான் படைக்கப்பட்டிருக்கின் றன. என்றாலும் அவர்கள் அனுபவிக்கும் வழியில் பெரும் தவறு செய்கிறார்கள. மறுமை வாழ்வு குறித்து அவர்கள் கொடுக்கும் விரிவுரை விசித்திரமானது. இதோ அவர்கள் பேசுகிறார்கள், கேளுங்கள்:

“ரொக்கத்துக்கு வியாபாரம் செய்வதைவிடக் கடனுக்கு வியாபாரம் செய்வது மேலானதல்ல. உலக வாழ்வு ரொக் கத்துக்கு நிகரானது. ஏனெனில் அது இப்போது நம் கையி லிருக்கிறது. மறுமை வாழ்வு கடனுக்கு நிகரானது. ஏனெனில் அது என்றோ ஒருநாள் வரக்கூடியது. எனவே நாளை வரக்கூடிய மறுமைக்காக கையிலிருக்கும் இம்மையை உதறித் தள்ளுவது அறிவுடைமையல்ல.”

அவர்களின் விரிவுரை தொடர்கிறது:

“சந்தேகத்திற்கிடமான ஒன்றைவிட நிச்சயமான ஒன்று சிறப்புமிக்கது. மறுமை வாழ்வு சந்தேகத்திற்கிடமான ஒன்று அது வரவும் செய்யலாம்; வராமலும் போகலாம் ஆனால் இம்மையில் சந்தேகத்திற்கு இடமில்லை. ஏனெனில் அது நம் கண்களுக்கு முன்னால், மற்றப் புலன்களுக்கு முன்னால் விரிந்து கிடக்கிறது. அதன் இன்ப நாதம் நம் செவியை இனிக்க வைக்கிறது. அதன் மகிழ்ச்சி வாழ்வு நம் இதயத்தை மகிழ வைக்கிறது.

“இத்தகைய இன்ப வாழ்வை நாம் ஏன் ஒதுக்கித் தள்ள வேண்டும்? நிச்சயமான ஒன்றை—கண்முன்னால் பரந்து கிடக்கும் ஒன்றைச் சந்தேகத்திற்கிடமான ஒன்றுக்காக ஏன் ஒதுக்கித் தள்ள வேண்டும்?”

சிந்தையின் கண்ணோட்டத்தில் ஏற்பட்ட கோளாறுதான் அவர்களை எப்படியெல்லாம் பேச வைக்கிறது என்பது நிச்சயமான ஒன்று. அதில் சந்தேகத்திற்கு இடமேயில்லை. உலக வாழ்வையே கட்டிக்கொண்டு மாரடிக்கும் அவர்கள் இன்னும் சிறிது ஆழமாகச் சிந்தனை செய்திருந்தால் அவர்களின் கருத்து நிச்சயம் மாறிப்போயிருக்கும்.

சிந்தனை செய்து உண்மையை அறிவதற்காக அவர்கள் நாடுவிட்டு நாடு செல்ல வேண்டியதில்லை. கடனுக்கும் ரொக்கத்துக்குமுள்ள வேற்றுமையைத் தெரிந்துகொள்வதற்காக அவர்கள் காடு மலைகளைக் கடந்து பிரயாணம் செய்ய வேண்டியதில்லை. அன்றாடம் மனிதனின் வாழ்க்கையில் நடக்கும் சம்பவங்களை நிதானமாகச் சிந்தித்துப் பார்த்தாலே போதும்.

வியாபாரிகளைக் கேட்டால் கடனைவிட ரொக்கமே சிறந்தது என்றுதான் சொல்வார்கள். அதில் எனக்கும் சந்தேகமில்லை. ஆனால் கடனாகக் கொடுக்கப்பட்ட பணத்தினால் எத்தகைய நன்மையும் கிடையாது என்று நம்மால் எப்படிச் சொல்ல முடியும்? ரொக்கப் பணம் பயன்படாத எத்தனையோ நேரங்களில் கடன் பணம் உபயோகப்படுவதை அவர்கள் கண்டதில்லையா?

மறுமை வாழ்வை அவர்கள் சந்தேகத்திற்கிடமானது என்று குறிப்பிடுகிறார்கள். மனிதனுக்கு உயிர் என்று ஒன்று இருப்பதை ஏற்றுக்கொள்ளும் அவர்கள் அந்த உயிருக்கென்று ஒரு வாழ்க்கை இருப்பது சந்தேகமானது என்று ஏன் நினைக்கிறார்கள்? நம்மால் விளக்கம் கொடுக்க முடியாது. உண்மையில் அவர்களாலும் அதை விளக்க முடியாது. ஏனெனில் அறியாமையின் அடிப்படையில் தோன்றும் தீர்மானங்களுக்குத் திருப்திகரமாக விளக்கம் கொடுப்பது அசாத்தியமான ஒன்று.

“அவர்கள் மறுமையை விற்றுவிட்டு அதற்குப் பதிலாக இம்மையை வாங்கிக் கொண்டார்கள்” என்று திருக் குர்ஆன் கூறுகிறது.

“உங்களிடமிருப்பது அழிந்துவிடும். இறைவனிடமிருப்பது அழியாதது” எனும் இறைவசனம் இம்மையையும் மறுமையையும் பிரித்துக் காட்டுகிறது.

மேற்குறிப்பிட்ட மதிமயக்கத்தை அழிப்பதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. திருக் குர்ஆனின் கருத்துக்களை அப்படியே நம்புவதால் மதிமயக்கத்தை அழிக்கலாம். இம்மையைத் திருக் குர்ஆன் மறுமையின் அந்தஸ்துக்கு உயர்த்தி வைக்கவில்லை.

மறுமை என்பது நல்லது; நிலையானது" என்று அது விளக்கம் கொடுக்கிறது.

இப்படித் திருக் குர்ஆனை நம்பாதவர்கள் சிந்தனை செய்து தான் மதிமயக்கத்தை அழிக்கவேண்டும். முதல் வழியைவிட இது சற்றுக் கடினமானது.

மதிமயக்கம் கொண்டவர்கள் இம்மையை ரொக்கத்துக்கும் மறுமையைக் கடனுக்கும் ஒப்பிடுகிறார்கள் அல்லவா? அது உண்மைதான். இம்மை என்பது கையிலிருக்கும் வாழ்க்கை. எனவே அதனை ரொக்கப் பணத்துக்கு ஒப்பிடுவதில் தவறு கிடையாது. அதுபோல், மறுமை என்பது நாளைக்குக் கிடைக்கும் வாழ்க்கை. எனவே அதனைக் கடனுக்கு ஒப்பிடுவது நியாயம் தான்.

ஆனால் ரொக்கத்தைவிடக் கடன் மேலானதல்ல என்று கூறுகின்றார்களே, அதில்தான் நீங்கள் உங்கள் சிந்தனையைச் செலுத்தவேண்டும். கொடுக்கப்பட்ட கடன் கூடாமல் குறையாமல் திரும்பி வந்தால் அவர்கள் கருத்து நேர்மையானதுதான் ஆனால் மறுமை வாழ்வு இம்மையின் வாழ்வைப் போன்றதல்ல. நூறு ரூபாய் சம்பாதிப்பதற்காக ஐம்பது ரூபாய் செலவு செய்து சிறிது நாள் பொறுத்திருப்பது முட்டாள் தனமான செயலா? நாளைக்கு வியாதி அதிகப்படக் கூடாது என்பதற்காக இன்றைய இன்பங்களைத் தியாகம் செய்வது அறிவுடைமை யல்லவா?

வர்த்தகர்களின் வாழ்க்கையைப் பார்க்கும்போது இந்த உண்மை நமக்கு நன்றாகத் தெரிகிறது. அவர்கள் கப்பலேறித் திரைகடலைக் கடக்கிறார்கள்; எதிர்ப்படும் இன்னல்களை எல்லாம் சகித்துக் கொள்கிறார்கள்; கையிலுள்ள இன்பங்களை எல்லாம் தியாகம் செய்கிறார்கள். ஏனெனில் நாளைக்குத் தம் வர்த்தகத்தில் பெருத்த லாபம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறார்கள். வேண்டுமானால் அவர்களிடம் கேட்டுப் பாருங்களேன். ' இது முட்டாள் தனம்! நாளைக்கு வரக்கூடிய லாபத்துக்காக இன்றைய இன்பங்களைத் தியாகம் செய்து துன்பப்படுவது அறிவுடைமையல்ல!" என்று சொல்லிப் பாருங்களேன்.

அவர்கள் என்ன சொல்வார்கள் தெரியுமா? உங்கள் வார்த்தைக்கு மதிப்புக் கொடுக்கமாட்டார்கள். உங்கள் தத்துவ விளக்கத்தை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். "நாளைக்கு வரக்கூடிய லாபம் இன்றைக்குக் கையிலிருக்கும் ரொக்கத்தைவிடச் சிறந்தது!" என்று அவர்கள் உங்களுக்குச் சொல்லிக் கொடுப்பார்கள். "நாளைக்கு வரும் பத்து இன்றைக்குக் கையிலிருக்கும் ஒன்றைவிட மேலானது" என்று புத்திமதி கூறுவார்கள்.

உண்மையில் இந்தத் தத்துவத்தை நீங்கள் அவர்களிடமிருந்து தானா தெரிந்து கொள்ள வேண்டும்? அவர்கள் சொல்லிக் கொடுக்க வேண்டியதில்லை. உங்களுக்கே அது நன்றாகத் தெரியும். கையிலிருக்கும் காலணா நல்லதுதான். ஆனால் அது நாளைக்கு நாலணாவாகத் திரும்பி வந்தால் முன்னதைவிடப் பின்னதை யாரால் எப்படித் தாழ்த்தி மதிக்க முடியும்? (தொடரும்)

# பிற மொழிகளில் தொழுகை

(சென்ற இதழின் தொடர்)

மூலம்: மௌலானா சய்யித் அபுல் அஃலா மவ்தூதி

தமிழ்: மௌலவி அப்துஸ் ஸமத் நத்வீ



முஸ்லிம்களின் மார்க்க அடிப்படை எந்த நூலை, எந்த நபியின் வழி காட்டலை பொறுத்திருக்கிறதோ, அந்த நூல் தன் மூல மொழியில் நிலை பெற்றிருப்பதும், அந்த நபியின் போதனைகள் அவர்கள் கூறிய மொழியிலேயே பாதுகாக்கப்பட்டிருப்பதும் முஸ்லிம்களின் பெரும் பாக்கியமாகும்.

நாம் இந்தப் பாக்கியத்தை மதிக்காமல், நமது மதத்தின் அடிப்படை மொழி பெயர்ப்புகளைச் சார்ந்ததாக அமைந்து விட வழி திறக்க முயல்வது நாம் புரியும் அறியாமையல்லவா? நாம் தொழுது வரும் ஐங்காலத் தொழுகைதான் நம்மை குர்ஆனோடும், திரு நபியவர்களின் போதனைகளோடும் பிணைத்து வைத்திருக்கும் பெரும் சக்தியாகத் திகழ்கிறது. அதன் மொழி மாறுபட்டு விட்டதன் பின்னர், நம் மார்க்க ஊற்றுக்கண்களாகத் திகழும் குர்ஆனுடனும், திரு நபியின் வாக்கியங்களுடனும் நமது தொடர்பு எஞ்சியிருப்பது சற்று சிரமமாகிவிடும்.

**சமயப் பாதுகாப்புக்கு சிறந்த முறை:**

ஒரு மதம் பாதுகாக்கப் படுவதற்கு மிக மிக அவசியமாக விருப்பது அதன் வணக்கங்கள், ஆசார அனுஷ்டானங்கள் அதன் மூல வடிவில் நிலை பெற்றிருப்பதுதான் அன்றி, மக்களுக்கு அவற்றில் தம் இஷ்டப்படி யெல்லாம் மாற்றமோ, திருத்தமோ செய்து கொள்ளும் உரிமை இருக்கக் கூடாது. மதத்தின் மிக முக்கிய பகுதி அதன் ஆசார அனுஷ்டானங்களேயாகும். இவற்றை அனுசரித்து மதித்து, பேணுவதன் மூலமே மார்க்கத்தின் இதர போதனைகளும் செயல் பெறும் சக்தி பெறுகிறது. எந்த அல்லாஹ்வின் மீது முஸ்லிம்கள் ஈமான் கொண்டிருக்கின்றனரோ அந்த எல்லாம் வல்ல அல்லாஹ்வினால் அமைக்கப்பட்ட வார்த்தைகளாகவும், பகுதிகளாகவும் குர்ஆன் திகழ்கின்றது என்ற நம்பிக்கை ஒன்றே அந்த வணக்கங்களை புனிதமானதாகவும், அவசியம் செயல்படுத்த வேண்டியதாகவும் முஸ்லிம்களை கருதச் செய்

கிறது. அந்த வணக்கங்களின் முறைகளையும், அவற்றின் வார்த்தைகளையும் அமைப்ப தில் மக்கள் தமது அபிப்பிரா யத்திற்கும், இஷ்டத்திற்கும் இடந்தர ஆரம்பித்துவிடுவார் களேயாயின் உள்ளத்திலிருக் கும் அந்த உறுதியில் ஆட்டங் கண்டுவிடும். உறுதியில் ஆட் டங்கண்டுவிட்டதும் மார்க்கம் முழுதும் மாறுபடவும், அதன் சட்டதிட்டங்கள் வேறுபடவும் துவங்கிவிடும். வணக்கங் களைப் பின்பற்றுவதில் மக்கள் சுதந்திரர்களாக சமைந்து விடக்கூடிய வழிகள் திறந்து விடும்.

**இஸ்லாமிய ஒற்றுமைக்கு சிறந்த வழி முறை:**

மூன்ருவதாக ஒரு முக்கிய விஷயத்தைக் கவனியுங்கள். பாங்கின் மொழியும், தொழு கையின் மொழியும் ஒன்ரு கவே இருப்பது சர்வ உலகிலு முள்ள பல்வேறு வகுப்பினர் களாகவும், நாட்டினர்களாக வும், பல மொழி பேசுபவர்க

ளாகவும் வதியும் முஸ்லிம்கள் அனைவர்களையும் பிணைத்து சர்வலோக சகோதரத்து வத்தை அமைத்துவிடும் ஒரு மாபெரும் இணைப்புச் சக்தியாகத் திகழ்கிறது.

உலகின் எந்தப் பகுதியிலாவது நீங்கள் சென்றுவிடுங்கள். அங்கு பாங்கொலி முழங்கச் செவியுற்றதும் இங்கு உங்கள் மார்க்கத்தைச் சார்ந்த சமூகத்தவர் வாழ்கின்றனர்; தொழுகைக்காக அழைக்கப்படுகின்றனர் என்பதை உணர்ந்து கொள்கின்றீர்கள். எந்த இடத்திற்கு நீங்கள் தொழச்சென்றாலும் பழக்கப்பட்ட வார்த்தைகளையே செவியுறுவீர்கள். நீங்கள் இலண்டனிலோ, நைஜீரியாவிலோ, இந்தோனேஷியாவிலோ வேறு எங்கேனும் சென்றிருப்பினும் சரியே, உங்களுடன் இருக்கும் முஸ்லிம்களின் மொழிகளை நீங்கள் அறியாதவர்களாயிருப்பினும் சரியே, நீங்கள் தொழுகையில் அவர்களுக்கு அன்னியராகவோ, அவர்கள் உங்களுக்கு அன்னியர்களாகவோ தோற்றுவதில்லை.

இதற்குப் பதிலாக ஒவ்வொரு இனத்தவரும் தொழுகையைத் தன் தன் தாய் மொழியில் தொழவும், பாங்கு அந்தந்த நாட்டு மொழிகளில் முழங்கவும் அனுமதிக்கப்பட்டுவிடின் இந்த அகில உலக சகோதரத்துவம் எண்ணற்ற சிறு சிறு பிரிவுகளாகப் பிரிந்து சிதறுண்டுபோய்விடும். இந்தியாவிலும், பாக்கிஸ்தானிலும் மட்டும் 300-க்கு மேற்பட்ட மொழிகள் பேசப்பட்டு வருகின்றன. இந்த இரு நாடுகளில் மாத்திரம், எத்தனை மொழிகள் இருக்கின்றனவோ அத்தனை பிரிவுகளாக ஒரே முஸ்லிம் சமுதாயமாகிய பெரும் சக்தி பிரிந்து சிதறுண்டுவிடும். ஒரு நாட்டு முஸ்லிம் தன் நாட்டைவிட்டு வெளிக் கிளம்புவானாகில் எங்குமே அவன் பாங்கொலியைப் புரிந்து கொள்ளவே முடியாது. அந்த நாட்டு முஸ்லிம்களோடு சேர்ந்து தொழவும் முடியாது. இந் நிலையே உலகின் இதர பாகங்களிலும் ஏற்பட்டுவிடும். உலகின் பலதிக்குகளிலிருந்தும் ஒன்றுகூடி மொழி, இன நிற, பாகுபாடின்றி ஒரே இறைவனை-ஒரே மொழியில்-ஒரேவித உடையில் ஆற்றப்படும் ஹஜ்ஜு சமயத்திலோ, காட்சிதரும் அந்த அபூர்வ ஐக்கிய நிலை பாபிலோன் கோபுரத்தின் நிலையைப் போன்று காட்சிதர ஆரம்பித்து விடும்.

உண்மையில் கிருத்துவ உலகம் எந்தச் சமுதாயக் கோவில் கொள்கையில் சிக்குண்டு தமக்குள்ளே போரிட்டுக் கொள்ளும் சமுதாயமாகப் பிளவு பட்டுவிட்டதோ அத்தகைய சமுதாயக் கோவில் கொள்கையே இஸ்லாமிய சமுதாயத்தில் தோன்றிவிடலாம். சமூகப் பற்று, வம்சப் பற்று-வர்ணப்பற்று - மொழிப்

பற்று ஆகியவற்ருல் துண்டம் துண்டமாகப் பிளவு பட்டுக் கிடக்கும் மனிதத்துவத்தில் அகில உலக சகோதரத்துவம் நிலைத்திருக்க இஸ்லாம் மிகச் சிறந்த ஒரு சீரிய முறையை உண்டுபண்ணி யிருக்கிறது. இதனுல், உலகெங்கும் அரபி மொழி - அரபித் தொழுகை - அரபிக் கலிமா முதலியவற்றி லும் அரபியில் சில தெரிந்த- கூட்டான - பழக்க பதங்களை யும் நீங்கள் காணுகிறீர்கள். இந்தப் பெரும் அருட்கொடையை உணர வேண்டாமா? இந்த இறையாட்சி மொழி யின் காரணமாக அல்லவா ஓரிடத்து முஸ்லிம் மற்ருேரிடத்தின் முஸ்லிமை புரிந்து கொள்கிருன். ஆதியிலிருந்தே அவ்விரு ஆத்மாக்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்து வருவது போன்றல்லவா அவ்விரு முஸ்லிம்களும் கலந்துறவாடுகின்றனர். ஆகவே, தாங்கள் அரபி மொழியில் தொழப்படுவதையே விரும்புவீர்கள்; இதர மொழிகளில் தொழுவதைத் தடுக்கப்பட்டுள்ள சீரிய காரணத்தை நீங்கள் நன்கு புரிந்துகொண்டிருப்பீர்களென்று நம்புகிறேன்.

(முற்றும்)

# நெஞ்சம் விட்டகலா நேர்த்தியான மனிதர்

N. B. அப்துல் ஜப்பார், B. A.

"நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத் திவ்வுலகு"—

என்றான் வள்ளுவன். சென்ற நாற்பதாண்டு கட்கும் மேலாக என்னுடன் ஒன்றித்து வாழ்ந்து, என்னுடைய அனைத்து இன்ப துன்பங்களிலும் கலந்து சமபங்கு ஏற்று, ஏங்குங்காலை எனக்கு ஆறுதலளித்து, வரும் விருந்தினரைத் தெவிட்டத் தெவிட்ட மகிழ்வித்து, தானும் மகிழ்ந்து பிறரையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தி, உற்றதோழனாய், என் முதல் தங்கையின் ஆருயிர்க் கணவராய், எண்ணற்ற மக்கட்கு எளிய நண்பராய், மிகச் சிறந்த ஒரு முஸ்லிம் மாசிகையின் மறைமுக ஆசிரியராய், எதிரிக்கும் கனிவான நேசராய்த் திகழ்ந்து, இவ் அநித்திய உலகில் அரை நூற்றாண்டு காலம் கூட உயிர்வாழ முடியாமற்போன — ஆயினும் பன்னூற்றாண்டு வாழ்ந்தும் பல மக்கள் செய்ய முடியாப் பல்வேறு சாதனைகளைப் புரிந்து சிரஞ்சீவித் தனம் பெற்றுவிட்ட ஜனாப் எஸ். அப்துர் ரஹீம், ஆவினைப் பிரிந்த கன்றெனத் துயருறும் அனைத்து அன்பர்களுக்கும் சமமான ஏக்கத்தையும் துக்கத்தையும் விளைத்துச் சென்று விட்டாலும், அன்னாருடனே அதிக காலம் தொடர்பு கொண்டிருந்த நெருங்கிய உறவினனாகிய எனக்கே அத்துன்பச் செறிவின் வேதனைக் கொடுமைகள் மாறா வடுவை விளைத்துவிட்டிருக்கின்றமையால், இந்த நினைவுச் சின்னத்தொடர் கட்டுரையை அனைவரின் சார்பாகவும் அர்ப்பணித்து விடுகிறேன். அன்னார் உயிர் வாழ்ந்த அத்தனை காலமும் நான் அவரை அன்புடனே "பாயி!" என்றே அழைத்து வந்தேனாகையால், அந்த இடுகுறிப் பெயருடனேயே இக் கட்டுரை நெடுக அவரைக் குறிப்பிடுகிறேன்.

என்னினும் சுமார் 18 அல்லது 20 மாதங்கள் வயதில் மூத்தவரான அவர் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். சிறுவயதிலேயே அன்னையையும், ஆசையுடன் தம்மை வளர்த்து வந்த அக்காளையும் இழந்தவர். அவருடைய மூத்த சகோதரர் தாமும் சிரமத்துடன் பள்ளியில் பயின்று கொண்டு, தம்பியையும் எப்படியோ கஷ்டத்துடன் படிக்கச் செய்தார். அவர்களுடைய தந்தை பெரும்பாலும் பர்மாவிலேயே இருந்தமையால், இந் நாட்டில் அச் சகோதரர்கள் மிகவும் கெட்டிக் காரத்தனத்துடன் சிற்றன்னையையும், இரு தம்பிகளையும் பராமரித்தார்கள். எனக்குப் பள்ளிக்கூடவிடுமுறை நாட்களில் நாச்சியார் கோவில்

செல்லும் வாய்ப்பு ஏற்படும். அப்போதெல்லாம் என் "பாயி" என்னுடன் மிக அன்னியோன்யமாகநெருங்கிப் பழகுவார். முன்முறைஅவரைச்சந்தித்துச்சென்ற நாளிலிருந்து மறுமுறை சந்திக்க நேரும் இந்நாள் வரையிலான அனைத்து நிகழ்ச்சிகளையும் நாங்கள் பரஸ்பரம் பேசித் தீர்ப்போம். அவருடைய அண்ணனாகிய ஜனாப் எஸ். அப்துல் மஜீத்- (தற்சமயம்திருவிடைச்சேரி பெருநிலக்கிழாராகவும், பட்டா மணியக்காரராகவும் திகழ்பவர்) எங்களிருவரின் சிறுபிள்ளைத் தனமான வேடிக்கைப் பேச்சுக்களைக் கேட்டு மகிழ்வார்.

நாள் சென்று என் பாயி பள்ளிப் படிப்பைத் தொடங்கி யிருந்தார். எனவே, என்னினும் இரு வகுப்புக் குறைவாகவே அவர் படித்து வந்தார். அவரினும் நானே படித்தவன் என்று அவர் அந்தக்கால முதலே எனக்குக் கண்ணியமும், கௌரவமும், மரியாதையையும் வழங்கி வருவார். நானோ, அவர் என்னிலும் வயதில் மூத்தவரென்னும் மரியாதையுடனும் அடக்கத்துடனும் அவரிடம ஒழுகிக் கொள்வேன். ஆனாலும், 1935-ஆம் வருடம் வரை (எனக்கு அப்போது வயது 16; அவருக்கு வயது 18) அவர் சென்னை நகரைப் பார்த்ததே கிடையாது. நான் "பட்டணத்தில்" படிப்பவன், நாடறிந்த "தாருல் இஸ்லாம்" பத்திராதிபரின் மைந்தன், எந்தத் தவற்றொழுக்கத்திலும் ஈடுபடாதவன், பள்ளிச் சிறுவர்களைப் பின்பற்றி விபரீத விளையாட்டிலும் வீண் பொழுது போக்கிலும் நேரங் கடத்தாதவன் என்றெல்லாம் என்னைப்போற்றி அவ்வாறே யாவர்க்கும் என்னை அறிமுகப்படுத்தி என்னை மேலும் மேலும் கௌரவிப்பார். நானோ, அவர் கிராமவாசியாயினும் மக்கள் டலரின் குணாகுணங்களை அறிந்தவர் எவரெவரிடம் எத்தகுவ்தத்தில்

## சந்தாதாரர்கள் கவனத்திற்கு!

சந்தாத் தொகை அனுப்பும் பொழுதும் கடிதம் எழுதும் பொழுதும் தங்கள் சந்தா எண்ணைக் குறிப்பிடுக.

நிருவாகி, 'முஸ்லிம் முரசு'

---

நடந்துகொள்ள வேண்டும். என்னும் பெற்றியுணர்ந்தவர். பள்ளிப்படிப்பில் எனக்குப் பின் தங்கியிருந்தாலும் பொது அறிவில் என்னினும் முன்னேங்கி நிற்பவர், விஷம விளையாட்டுகளிலோ, சிறுபிள்ளைத்தனமான கேளிக்கைகளிலோ கொஞ்சமும் ஈடுபடாதவர்என்று அவரை என் ஆப்த நண்பராக, வழிகாட்டியாக, யோசனை வழங்குபவராக, நேசம் மிக்கவராக ஏற்றிருந்தேன். கோடை விடுமுறை முழுதும் பகலில் பேசுவோம், படிப்போம்; மாலையில் ஆற்றங்கரை சென்று உலவிவருவோம் இரவில் நெடுநேரம் பேசி, அடுத்தடுத்துப் படுத்தே கண்ணுறங்குவோம்.

என் தந்தை ஹஜ்யாத்திரை செய்யப் புறப்பட்டபோது, அவரை வழியனுப்ப வந்த கூட்டத்தினருடன் சேர்ந்து என்பாயி சென்னைக்கு முதன் முறையாக வந்து, இந் நகரின் மாண்பினைக் கண்டு மருண்டு விட்டார். நாங்கள் அப்பொழுது தம்பு செட்டித் தெருவில், போஸ்டாபீஸ் வீதி முனையருகே குடியிருந்தோம். தாருல் இஸ்லாம் அலுவலகமோ பிராட்வேயில்'லோன் ஸ்கொயர்' பூங்கா அருகில் இருந்தது. நான் பள்ளிக்கூடம் புறப்படுமுன் என் பாயியை, அவரது விருப்பப்படி எங்கள் அலுவலகத்துக்கு அழைத்துச் சென்றேன். (என் தந்தை எங்கே, எவரிடத்தில் பேசிக் கொண்டிருந்தாலும், எந்த மேடையில் ஏறிப் பிரசங்கம் புரிந்தாலும் அங்கெல்லாம் என் பாயி கடைசிவரை நின்று கேட்பார். 'தாருல் இஸ்லாம்' பத்திரிகையைத் தலைமுதல் அடிவரை ஒரு வரி விடாமல் படிப்பார். எனவே, அன்றும் அவர் என் தந்தை அலுவலகத்தில் எவருடனே வார்த்தையாடிக் கொண்டிருந்ததை அதி அக்கறையுடன் கவனித்துக் கொண்டிருந்தார்.) நான் பள்ளிக்கூடம் செல்ல நேரமாவதைத் தெரிந்து அவர்என்னைப்போகச்சென்னார்.

"வீடு திரும்ப உங்களுக்கு வழி தெரிய வேண்டுமே!" என்றேன் கவலையுடன்.

"என்ன பிரமாதம்! நான் சரியாக வீட்டுக்கு வந்துவிடுவேன்" என்றார்.

அன்று பகல் பெரிய விருந்து எங்கள் வீட்டில் ஏற்பாடாகியிருந்தது. நான் 1-20மணிக்குப் பள்ளிக் கூடத்திலிருந்து வீடு வந்தேன். பந்தியில் யாவரும் அமர்ந்து விட்டார்கள். ஆனல், பாயியை மட்டும் காணேம்! அவரும் நானும் சேர்ந்து எங்கோ சுற்றிக் கொண்டிருப்பதாக என் அன்னையுட்பட யாவரும் நினைத்திருந்தார்கள். நான் வந்து அவரைத் தேடவே, எல்லாருக்கும் திகைப்பு ஏற்பட்டுவிட்டது. அவர் தாருல் இஸ்லாம் அலுவலகத்தை விட்டுப் பகல் 12-15 மணிக்கே புறப்பட்டு விட்டார் என்று செய்தி தெரிந்தது. வழி தவறி எங்கோ சுற்றுகிறர் என்பதை நான் யூகித்துக் கொண்டேன். அவர் வருகிறவரை சாப்பிடுவதில்லையென்று சபதம் பூண்டு, பிற்பகல் பள்ளிக்கூடம் போவதையும் 'மட்டம்' போட்டுவிட்டு பசியுடன்காத்திருந்தேன். அவர் பிறகு வந்து சாப்பிடுவார் என்று எல்லாரும் எனக்கு எத்தனையோ ஆறுதல் சொல்லியும் எனக்கு ஒன்றும் பிடிக்கவில்லை.

(தொடரும்)

## ஆனந்தா பிலிம்ஸ்
## கோவை

தரமான

உயர்ந்த திரைப்படங்களின்

கோவை ஜில்லா வினியோகஸ்தர்கள்:

எமது புதிய வெளியீடு

**R. R. பிக்சர்ஸ்**

*****************************************

# பறக்கும் பாவை

*****************************************

(ஈஸ்ட்மன் கலர்)

டைரக்‌ஷன்: ராமண்ணா

கைவசம் உள்ள திரைப் படங்கள்:

சரஸ்வதி சபதம், தனிப்பிறவி, குமரிப்பெண், முகராசி, எங்கபாப்பா முதலியன.

"தென்னிந்திய கல்வி நிதி" (Southern India Education Trust Women's College) எஸ். ஐ. ஈ. டி. 'மாதர் கல்லூரி' என்று சொல்லப்படும் பெண் கல்லூரியின் நிர்வாகக் குழுத் தலைவர் (Chairman) ஹாஜானி பாத்திமா அக்தர் கல்லூரி ஸ்தாபகர் ஜஸ்டிஸ் பஷீர் அஹ்மத் சயீத் அவர்களின் மனைவி அவர்களை நமது ஆசிரியர் கண்டு பேசியபோது நிகழ்ந்த இந்த உரையாடலின் முற்பகுதி செப்டம்பர் இதழில் வெளியாகி உள்ளது.

## எஸ். ஐ. ஈ. டி.

# பெண்கள் கல்லூரி



முஸ்லிம் பெண்கள் தொழுவதற்காக நவீன முறையில் மஸ்ஜித் ஒன்று கட்டப் பெற்று, அதன் திறப்பு விழா தான் அண்மையில் நடைபெற்றது. இதில் ஒரே சமயத்தில் 200 பேர்கள் தொழலாம் இதன் நிர்வாகத்தை கல்லூரி விரிவுரையாளர்கள் இருவர் கவனிக்கின்றனர். தொழுகைக்கு ஒலூ (முகம், கைகால்களைச் சுத்தம்) செய்வதற்காக 25 தண்ணீர் குழாய்கள் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இந்த மஸ்ஜிதைக் கட்டி முடிப்பதற்கான மொத்தச் செலவு ஒன்றரை லட்சம் ரூபாய்.

முஸ்லிம் பெண்களுக்கு ஒவ்வொரு திங்கட்கிழமையும் ஒரு மணி நேரம் மத போதனைக்காக ஒதுக்கப்பட்டு இருக்கிறது.

ஒவ்வொரு வருடமும் சிறந்த சமய அறிஞர்களின் தலைமையில் மீலாத் விழா நடைபெறுகிறது.

நோன்புக் காலத்தில் முஸ்லிம் மாணவிகள் நோன்பு பிடிப்பதற்காக உணவு வசதிகள் செய்து தரப்படுகின்றன.

முஸ்லிம் சமூக முன்னேற்றத்திற்காக மற்றொரு வகையில் இக்கல்லூரி உதவுகிறது. உத்தியோக நியமனங்களில் பல சமூகப் பெண்களும் போட்டியில் தேர்ந்தெடுக்கப்படும்போது, முஸ்லிம் பெண்களுக்கே முதலிடம் தரப்படுகிறது. எடுத்துக்காட்டாக இரண்டு பெண்கள் ஒரு புரொபஸர் அல்லது லெக்ச்சரர் வேலைக்கு மனுப்போடும் போது, அவர்களின் தகுதியும், திறமையும் ஒரே விதமாக இருக்கிறதென்று வைத்துக்கொண்டால், அவர்களில் ஒருவர் முஸ்லிம் பெண்ணாக இருப்பின், அவருக்கே அந்தப் பதவி அளிக்கப் படுகிறது.

இக்கல்லூரியின் அமைப்பு ஒரு சர்வதேச அடிப்படையில் உருவானது என்று பாத்திமா அக்தர் கூறுகிறார். எப்படி என்றால், இக்கல்லூரியைக் கட்டுவ

த்திற்கு வெளிநாடுகள் பல்வற்றிலி ருந்தும் ஏராளமான பொருளுதவி கிடைத்திருக்கிறது. மன்னர்களும், வெளிநாட்டு அரசாங்கங்களும் நன்கொடைகள் வழங்கியுள்ளனர். மன்னர்களும், ஜனாதிபதிகளும் இங்கு வருகை தந்துள்ளனர். ஜோர்டான் மன்னர் ஹுசைன், ஐக்கிய அரபுக் குடியரசின் தலைவர் அப்துல் நாஸிர் போன்றவர்கள் இக்கல்லூரியில் சிறப்பான வரவேற்புப் பெற்றுள்ளனர்.

இக்கல்லூரி ஒரு சர்வதேச ஸ்தாபனம் என்பதற்குச் சான்றாக மற்றொரு உண்மையையும் கூற வேண்டும். மலேசியா முதலான வெளிநாடுகள் பலவற்றிலிருந்து ஏராளமான மாணவிகள் இங்கு வந்து படிக்கின்றனர்.

''முஸ்லிம்களின் பணம் அநியாயமாக மற்றவர்களுக்குப் பயன்படுகிறதே என்று சிலர் வேண்டுமென்றோ, அறியாமையாலோ கூறுகின்றனர். ஆனால் நன்கொடை வழங்கியவர்கள் யாரும் குறை கூறுவதில்லை எதுவும் கொடுக்காமல் குறைகூறுவோர் பலர் உண்டு. ஆனால் அவர்களும் தங்கள் பெண்களை இக்கல்லூரியில் சேர்க்க வரும் போதுதான் தங்களின் தவறான பொய்ப் பிரச்சாரத்தை நினைத்து வெட்கப்படுகின்றனர்.'' என்று சற்று சினத்துடன் கூறினார் கல்லூரித் தலைவி.

இச் சமயம் அவர்களின் கவனத்தை வேறுபக்கம் திருப்ப விரும்பிய நான், ஒரு கேள்வி கேட்டேன் :

''ஆமாம் இந்த மஸ்ஜிதைப் பெருஞ் செலவில் கட்டியிருக்கிறீர்களே, இதில் முஸ்லிம் மாணவிகள் அனைவரும் ஐந்து வேளையும் தொழுதுவருகிறார்களா? தொழுதுவர வேண்டுமென்று கட்டாயப் படுத்தப்படுகிறார்களா?''

''ஆம், எதையும் கட்டாயப் படுத்த முடியாதே! கட்டாயம் கசப்பைத் தரும். சட்ட விரோதமும்கூட. தொழுதுவரும்படி ஆசிரியர்களும் வார்டனும் கூறுவார்கள். தொழுகிற மாணவிகளைப் பார்க்கிறபோது தொழாத மாணவிகளுக்கு வெட்கம் பிடுங்கித்தின்னும். அவர்களும் நாளடைவில் தொழவும், நோன்பு பிடிக்கவும் துவங்கி விடுவார்கள்.''

எனது சந்திப்பின் போது புதிய மஸ்ஜிதையும், ஹாஸ்டல் முதலான மற்றப் பகுதிகளையும் பேகம் சாஹிபா சுற்றிக் காட்டிக் கொண்டு வரும்போது நிகழ்ந்த ஒரு சம்பவத்தையும் குறிப்பிட வேண்டும். வட இந்திய இந்துப் பெண்கள் சிலர் முழங்கால் வரையில் அரைப் பாவாடை உடுத்திக் கொண்டு வராந்தாவில் நடந்து சென்றனர். இதைக்கண்டபோது அவர்களைக் கடிந்துகொண்டு கல்லூரி விதிகளை விளக்கி, ''முழுப்பாவாடையுடன் தான் கல்லூரிக்கு வர வேண்டும் என்ற விதி இருப்பது உனக்குத் தெரியுமா? அப்படி வராவிட்டால் கல்லூரிவிடுதியில் தங்கக் கூடாது'' என்று கண்டிப்பாகக் கூறினார்,

ஒழுக்கத்துக்கும் கட்டுப்பாட்டிற்கும் முதலிடம் அளித்து, சிறப்பான முறையில் நிர்வகிக்கப்பட்டு வரும் நல்லதொரு கல்வி ஸ்தாபனத்தைப் பார்வை யிட்டோம் என்ற திருப்தியோடு விடைபெற்றுத் திரும்பினேன்.

★ ★ ★

# குளிர் கால காய்கறிகளை பயிரிட இதுவே சமயம்



**நிலத்திலோ, புழக்கடைத் தோட்டத்திலோ அல்லது மண் சட்டியிலிலோ பயிரிடுங்கள்**

---

நாற்றுகளை நடுங்கள். அல்லது **தக்காளி, காலிப்ளவர், காபேஜ்,** நூல் கோல் விதைகளை விதைத்து நாற்று பயிரிடுங்கள். **துர்னிப் கிழங்கு, முள்ளங்கி, காரட், பீட்ரூட், பசளைக் கீரை** விதைகளை விதைத்தாலே போதும்.

## புழக்கடையில் காய்கறித் தோட்டத்தை அமையுங்கள்

உணவில் சுய - நிறைவை அடைய உதவுங்கள்

DA-66/388

# விடை

★ காமராஜர் இந்தியாவின் அடுத்த பிரதமராக வரு வாரா?

★ மிளகாய் ஏற்றுமதி தடை செய்யப் படுமா?

★ பக்தவத்சலனார் மந்திரி பதவி வகித்த மொத்த ஆண்டுகள் எத்தனை?

★ திருக் குர்ஆனுக்கு தமிழில் சிறந்த மொழி பெயர்ப்பு எதுவுமில்லையா?

எம். ஷேக் முஹையத்தீன்,
சேலம்.

கே: வியாபாரிகளால் தான் விலை வாசிகள் ஏறுகின்றன என்று ஆட்சியாளர்கள் ஓயா மல் சொல்லி வருகிறார்களே, அது சரி என்று நம்புகிறீர்களா!

ப: தங்களுடைய தவறான பொருளாதாரக் கொள்கை களினால் விளையும் தீமை களுக்கு பிறர் மீது பழி சுமத் தும் முயற்சிதான் அது. ரூபாய் மதிப்பைக் குறைக்கத் துணிந் ததன் மூலம் அவர்கள் தங் கள் தவறுகளை ஒரு தடவை யேனும் பகிரங்கமாக ஒப்புக் கொள்ள நேர்ந்தது.

உணவு தானியங்களின் விலையும், துணி, சர்க்கரை முதலிய பண்டங்களின் விலை யும் ஏறுவதற்கு சர்க்காரே துணை செய்கிறது. முக்கிய மான இப் பொருள்களின் விலை ஏறும் போது, காய்கறி போன்றவற்றை விளைவிப் போரும் உழைப்புக்குஊதியம் பெறுவோரும், தமது விளைச்ச லுக்கும், உழைப்புக்கும் பதி லாகக் கிடைக்கும் பணமும் கூடுதலாகக் கிடைக்க வேண்டுமென்று எதிர் பார்ப் பது இயற்கையே.

சர்க்காரின் மிதமிஞ்சிய செலவுகள், வரிவிதிப்புகள் ஆகியவற்றின் மூலமாக ரூபாய்க்கு உள்ள மதிப்பு நாளாவட்டத்தில் குறைந்து வருவதே விலை வாசிகளின் ஏற்றத்துக்கு முக்கிய காரண மாகும்.

எஸ். அமானுல்லா,
சென்னை-5.

கே: மிளகாயின் விலை நாளுக்கு நாள் ஏறிக்கொண்டே போகிறது. ஏற்றுமதியினால்

தான் விலை கூடுகிறது என்றால் ஏற்றுமதியை சர்க்கார் தடை செய்யுமா ?

ப: மிளகாய் ஏற்றுமதியைத் தடை செய்யும் உத்தேசம் சர்க்காருக்கு இருப்பதாகத் தெரியவில்லை. மிளகாய்க்காரம் வயிற்றுக்குத் தீங்கு என்று நாட்டு வைத்தியர்கள் அடிக்கடி சொல்வார்கள், எழுதுவார்கள். அவர்களுடைய கூற்றை ஆதரிப்பது போலிருக்கிறது சர்க்காரின் போக்கு. தங்கு தடையற்ற ஏற்றுமதியினால் மிளகாய் விலை ஏறட்டும், உபயோகம் குறையட்டும் என்று நினைக்கிறார்கள் போலும் !

ரூபாய் மதிப்பைக் குறைத்ததனால் நம் நாட்டு மிளகாய்க்கு இலங்கையில் கிராக்கி ஏற்பட்டிருப்பதாக சொல்கிறார்கள். அத்தியாவசிய உணவுப் பண்டங்களுள் மிளகாயும் ஒன்றாக இருப்பதால் அதன் ஏற்றுமதிக்கு வரையறை ஏற்படுத்த வேண்டும்.

ஜே. வி. சாமுவேல்,
புதுவை.

கே: அண்மையில் தம் எழுபதாவது பிறந்தநாள் விழா கொண்டாடிய சென்னை முதல் மந்திரி பக்தவத்சலனார் தம் ஆயுளில் எத்தனை ஆண்டுகள் அமைச்சர் பதவியை அனுபவித்திருக்கிறார் ?

ப: முதன் முதலாக ராஜாஜி அமைத்த மந்திரி சபையில்

## திருமண நன்றி அறிவிப்பு

சென்ற 2—10—66 புதன்கிழமை, எனது செல்வன் எம். ஏ. முகம்மது ஆதத்திற்கும் ஜனாப் எம். எம். வருசை முகம்மது அவர்களின் செல்வி சம்சத்து நிசா பேகத்திற்கும் நிகழ்ந்தேறிய திருமணத்திற்கு வருகை தந்து, வாழ்த்துக் கூறி, அன்பளிப்புகள் வழங்கி, விழாவினைச் சிறப்பித்தும், அஞ்சல் வழியாகவும் வாழ்த்துச் செய்தி அனுப்பிய ஆன்றோர்கள், உறவினர்கள் நண்பர்கள் அனைவருக்கும் எனது இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்:

இங்ஙனம்,

**ஆ. மு. கு. முகம்மது அபூபக்கர்,**

அழகங்குளம்.

## வாழ்க தம்பதிகள்!

சங்கு முகம்மது அபூபக்கர் ஸாஹிப் (மர்ஹூம்) அவர்கள் செல்வன் முஹம்மது யூனுஸுக்கும் ஜனுப் முஹம்மது யாஸின் அவர்களின் செல்வி ரஷீதா பீவிக்கும், சங்கு முகம்மது அபூபக்கர் ஸாஹிப் அவர்கள் செல்வன் ஹமீது சுல்தானுக்கும், ஜனுப் ஷேக் பரீது அவர்களின் செல்வி நூர்ஜஹான் பீவிக்கும் அண்மையில் வெகு சிறப்பாக திருமணம் நடைபெற்றது.

  

அபிராமம் மு. அ. காஜா முஹம்மது ஆலிம் அவர்களின் சகோதரர் புதல்வன் முஹம்மது யூசுபுக்கும், கமுதி அப்துல் வஹாப் பாகவி புதல்வி ஹமீதுன்னிஸாவுக்கும் 2—10—66-ல் வெகு சிறப்பாக திருமணம் நடைபெற்றது.

தம்பதிகள் நீடூழி வாழ்க!

அவர் பார்லிமெண்டரி, காரியதரிசிப் பதவியில் அமர்ந்து அனுபவம் பெற்ருர்.

அதன் பிறகு சென்ற பத்தொன்பது ஆண்டுகளில், இடையில் பத்து மாதம் தவிர பதினெட்டு ஆண்டுகளுக்கு மேலாக மந்திரி பதவியை வகித்து வருகிருர். இவ்வாறு அவர் தொடர்ந்து எல்லா மந்திரி சபைகளிலும் இடம் பெற்று வந்து, முதல் மந்திரி பதவியையும் அடைந்ததற்கு மற்ற சிறப்பியல்புகளோடு, கடும் உழைப்பாளி என்பதும் காரணம் என்று கூறப்படுகிறது. ஒவ்வொரு நாளும் 17 மணி நேரத்திற்கு மேலாக வேலை செய்வாராம் அவர்.

**ஆர். கமாலுத்தீன்,**
**கோவை.**

**கே:** நான் ஒரு நாளேக்குப் பத்துத் தடவைக்கு மேல் பதினேந்துதரம் வரைக்கும் கூட தேநீர் சாப்பிடுகிறேன். அது கெடுதல், காபி சாப்பிட்டால் பரவாயில்லை என்று நண்பர்கள் சொல்கிருர்கள். டீயை விடக் காப்பி நல்லதா?

ப: தேநீர் ஆயினும் காபி என்ருலும் அளவுக்கு மீறி அருந்துவதனுல் தீமையே விளேயும். டீயைவிடக் காப்பி நல்லது என்று ஒரு காலத்தில் கருதப்பட்டு வந்தது உண்மைதான். ஆனுல் காப்பியும் கூட தீங்கு விளேவிக்கக் கூடியதே என்று இப்போது டாக்டர்கள் கருதுகிருர்கள். அதிகமான காப்பி தலே சுற்றலேயும் வயிற்றுக் கோளாறுகளேயும் உண்டுபண்ணுவதாக இப்போது கண்டு பிடித்திருக்கிருர்கள்.

**எஸ். அஹ்மது கபீர்,**
**தஞ்சாவூர்.**

**கே:** ரூபாய் மதிப்புக் குறைப்பிஞல் நாட்டிற்கு ஏற்பட்டுள்ள பலன்கள் என்ன?

ப: இன்றுவரை நல்ல பலன் எதுவும் ஏற்பட்டதாகத்

தெரியவில்லை. ஆட்சியாளர் எதிர்பார்த்தது எதுவும்நடக்கவில்லை. ஏற்றுமதி அதிகமாகி அந்நியச் செலாவணி நிறையக் கிடைக்கும் என்றார்கள். நமக்குக் கொஞ்ச நஞ்சமிருந்த அந்நியச் செலாவணி இருப்பும் கூட வெகு வேகமாகக் கரைந்து வருகிறது.

இந்தியப் பண்டங்கள் இப்போது மிகக் குறைந்த விலையில் கிடைக்கிறது என்று வெளிநாடுகள் தம்முடைய இறக்குமதிகளை ஒன்றுக்கு நான்காகப் பெருக்கிக் கொண்டுவிடவில்லை. அதற்கு மாறாக, வழக்கமாக அவர்கள் வாங்கிக் கொண்டிருந்த பொருள்களுக்கு, அவர்களுடைய நாணயத்தில், முன்பு கொடுத்ததைவிடக் குறைவாகக் கொடுக்கிறார்கள். அதனால் அவர்களுக்குத்தான் லாபம்!

விலையில் நாம் பிற நாடுகளோடு நன்கு போட்டி போட முடிகிறது என்கிறார்கள். ஒரு சில பண்டங்களைப் பொறுத்தவரையில்தான் அது உண்மை அவற்றுள் பல நமக்கு அத்தியாவசியப் பண்டங்களாக இருப்பதால் உள் நாட்டில் விலைகள் ஏறி பொதுமக்களுக்கு மேலும் துன்பம் விளைந்திருக்கிறது.

இந்த நிலைமையில் ரூபாயின் மதிப்பு மேலும் குறைக்கப் படலாம் என்று பேசப்படுகிறது. சென்ற தடவை ரூபாயின் மதிப்பு குறைக்கப்

படுவதற்கு முன்பாக மறுத்துக் கொண்டிருந்தது போலவே இப்போதும் இல்லை என்றே அரசினர் சொல்லிக்கொண்டு வருகிறார்கள்.

**கே. ஏ. முஹம்மது இப்றாஹீம், பஹோ (மலேசியா)**

கே: இந்திய உதவி ஜனாதிபதி அவர்கள் அண்மையில் மலேசியா விஜயம் செய்த போது சந்தித்தவர்களுக்கு கை கூப்பி முகமன் கூறினார். அவர் முஸ்லிமாக இருந்தும் அவ்வாறு செய்தது சரிதானா ?

ப: முஸ்லிம்களைப் பெரும்பான்மையினராகக் கொண்ட ஒரு நாட்டிற்கு விஜயம் செய்யும் முஸ்லிம் பெருமகன் ஒருவர் இஸ்லாமிய முறையில் முகமன் கூறுவதுதான் சிறப்புடையது.

**எம். கமால் பாட்சா, நாச்சியார்கோவில்.**

கே: காமராஜர் இந்தியாவின் அடுத்த பிரதமராக வருவாரா ?

ப: எவ்வளவு சிறந்த மனிதராக இருந்தாலும் தென்னாட்டுக்காரர் ஒருவரை இந்தியாவின் பிரதமராகத் தேர்ந்தெடுக்க இசைய மாட்டார்கள், வடநாட்டுக் காங்கிரஸ்காரர்கள்.

ஜனாதிபதியாக வேண்டுமானால் அவரைத் தேர்ந்தெடுக்கக் கூடும்.

கே: நந்தாவின் ராஜிநாமா குறித்து தங்களுடைய கருத்து என்ன?

ப: நாட்டின் நிர்வாகத்திலும் அரசியலிலும் ஒழுக்கம் நிலவவேண்டும் என்று கூறிக் கொண்டு அதற்காகத்தம்மால் இயன்ற வரையில் அவர் பாடு பட்டு வந்தார். பெரிய காங்கிரஸ் புள்ளிகள் சிலருக்கு வெகு காலமாகவே அது பிடிக்க வில்லை. கவிழ்த்து விடுவதற்குக் காத்திருந்தார்கள். டில்லியில் நடந்த கலவரங்கள் அவர்களுக்குக் கை கொடுத்து உதவின!

அதோடு, மந்திரி சபையில் பிரதமருக்கு அடுத்ததான இரண்டாவது இடத்தில் அமர்ந்துகொண்டு ஒவ்வொரு தடவையும் பிரதமர் பதவிக்குப் போட்டியாக அவர் இருந்ததும் பலருக்குப் பிடிக்காமல் இருந்தது. அவர்களும், திரு. சவானை எதிர்காலப் பிரதமர் ஆகக் கருதுகிறவர்களும் கூட நந்தாஜீ விலகக் காரணமாக இருந்திருக்கிறார்கள்.

ஏ. ஓ. சக்கரிய்யா,
கார்நிகோபார். (அந்தமான்)

கே: முஸ்லிம் முரசு செப்டம்பர் மாத இதழின் கேள்வி பதில் பகுதியில் திருக்குர்ஆனின் தமிழ் மொழி பெயர்ப்பு ஏற்ற வகையில் ஒன்றும் வெளியாக வில்லை எனக் குறிப்பிட்டுள்ளீர்கள்.........இத்தகைய தவறான விடையைக் காண வருந்துகிறேன்.

ஏ. ஸீ. எம். ஹாசீம்,
பஸ்யால, (இலங்கை)

கே: தற்பொழுதுள்ள விளக்கத்துடன் கூடிய குர் ஆன் தமிழ் மொழி பெயர்ப்புகளில் மிகவும் சிறந்தது எது?

ப: "குறைந்த விலையில் சிறந்த குர் ஆன் எதுவுமே, தமிழில் பிறமதத்தினர் பார்த்துத் தெளிவு பெறும் படியாக இல்லை" என்று அந்த பதிலில் கூறப் பெற்றுள்ளது. நாம் குறிப்பிட்டது விளக்க உரையுடன் கூடிய மொழி பெயர்ப்பைப் பற்றித்தான். முஸ்லிமல்லாதாரும் முஸ்லிம்களும்கூட தனி மொழி பெயர்ப்பை விட விரிவுரையுடன் கூடிய மொழி பெயர்ப்பினால் நல்ல விளக்கமும் தெளிவும் பயனும் பெற முடியும். தமிழறிந்த அனைவருக்கும் பயன் படும்படியான முற்றுப் பெற்ற, விரிவுரையோடு கூடிய, தகுதிவாய்ந்த தமிழ் மொழி பெயர்ப்பு எதுவும் வெளியாக வில்லை என்றுதான் மீண்டும் வருத்தத்துடன் கூறுகிறோம். இஸ்லாமிய அறிஞர்களும் செல்வந்தர்களும் ஒன்றுகூடி முயன்றால் அத்தகைய நூல் வெளிவருவது சாத்தியமாகும்.

நல்ல விரிவுரையோடு கூடிய மொழி பெயர்ப்புகள் சில, ஆங்கிலத்தில் உள்ளன.

**Edited & Published by N. B. Rameeza 18, Ramasamy St, Madras-1. Printed by V. Sambandan at Sengunthamithran Press. 33 Armenian St., Madras.**